கொலம்பியா

# நாம் இருவர்
## டிராமா ஸெட்

6 ரிகார்டுகள் · GE · 6411 TO 6416

AVM ப்ரொடக்ஷன்ஸ் நாம் இருவர்
படத்திலுள்ள ஒரிஜினல் பாட்டுகள்,
வசனங்களுடன் பிரபலநடிகர்களான
T. R. மஹாலிங்கம், B. R. பந்துலு
K. சாரங்கபாணி · T. R. ராமச்சந்திரன்
மற்றும் இதரர்களைக் கொண்டு
. . . . . . . தயாரிக்கப்பெற்றது . . . . . . .



ஸரஸ்வதி ஸ்டோர்ஸ், மதராஸ். 2.

மேற்கண்ட ரிகார்டுகள் எங்களிடமும் கிடைக்கும்
மெஸர்ஸ். குப்தா கார்ப்பொரேஷன்
தபால் பெட்டி நெ. 35, 17-A/428, அருணாசல ஆச்சாரி தெரு, சேலம்

# பூச்சிகள் நாசினியாகிய இது




அசல் DDT தயாரிப்பாரும்; பூச்சிகளை ஒழிக்கும் DDT தயாரிப்புகளை முதன் முதலில் உபயோகத்திற்குக் கொண்டு வந்தவரான ஜே. ஆர். கேய்கி என்பவரளித்துள்ள தயாரிப்பு முறைப்படி தயாரிக்கப்பட்டது. இது வீடுகளில் ஈக்கள், எறும்புகள், கரப்பான் பூச்சிகள், கொசுக்கள், விளக்குப் பூச்சிகள், வெள்ளைப்பாச்சை இவைகளின் தொல்லையை ஒழிப்பதற்குரியதாகும். 10-சத விகிதம் DDT கலந்துள்ள நியோஸிட் இப்பொழுது பவுடர் ஒத்தி சகிதம் 2-அவுன்ஸ் டப்பிகளிலும், ½-பவுண்டு டின்களிலும், 1-பவுண்டு டின்களிலும் கிடைக்கும். ஆஸ்பத்திரி, பாடசாலை முதலிய ஸ்தாபனங்களுக்கு 28-பவுண்டு டின்களிலும் கிடைக்கும்.

## DDT Geigy DDT

நியோஸிட் முற்றிலும் பலனளிக்க வேண்டுமானால் வீட்டின் அறைகள் எல்லாவற்றிலும், முக்கியமாக சமையலறை உக்கிராணங்களிலும் அதை விடாமல் தூவி வரவேண்டும்; இலேசாகத் தூவினால் போதும். பவுடரை தூவி 3 அல்லது 4 தினங்களாவது அப்படியே போட்டிருக்க வேண்டும். தவறுதலாகத் தூத்து தள்ளப்பட்டுவிட்டால் மீண்டும் தூவ வேண்டும். உடனே பலனளிக்கவில்லையே யென்று அவசரப்படவேண்டாம். நியோஸிட் மெதுவாகத்தான் வேலைசெய்யும். ஆனால் பூச்சிகளை அது ஸ்திரமாக ஒழித்துவிடும். சில தினங்களில் அதன்பலன் தெரிந்துவிடும்.

# நியோஸிட்டை

## சரியானபடி உபயோகியுங்கள்!

கேய்கி இன்ஸெக்டிஸைட்ஸ் லிமிட்டெட்




நேவில் ஹவுஸ், நிக்கல் ரோடு
பல்லார்டு எஸ்டேட், பம்பாய்

D.J.K. 5314 TM

---

விநியோகஸ்தர்கள்:

தென்னிந்தியாவிற்கு: மெஸர்ஸ். அடிசன் அண்டு கோ., லிமிடெட், மவுண்டுரோடு, மதராஸ்

மைசூர் சமஸ்தானத்திற்கும், ஸீடெட் ஜில்லாக்களுக்கும்

மெஸர்ஸ். முகமது ரஹீம் கனீ, 99-B, உஸ்மான் கான்ரோடு, பெங்களூர் ஸிடி.

# கல்கி

## பொருளடக்கம்

மலர் 7 இதழ் 17 | நவம்பர் 23 | சர்வஜித்து கார்த்திகை 8





பிரிட்டிஷ் இளவரசி எலிஸபெத் அம்மைக்குக் கிடைத்திருக்கும் பாக்கியமே பாக்கியம்! அவர் தீர்க்காயுளுடன் சகல சௌபாக்கியங்களையும் பெற்றுச் சந்தோஷமாக வாழட்டும்!

இதற்கு முன்னும் எத்தனையோ பிரிட்டிஷ் ராஜ குமாரிகளுக்கும் ராஜ குமாரர்களுக்கும் கல்யாணமாகி யிருக்கிறது: அப்போதெல்லாம் பிரிட்டனும் சாம்ராஜ்ய நாடுகளும் திமிலோகப்பட்டுக் கொண்டிருக்கும். ஆனால், இந்தியா அதைக் கொஞ்சங்கூடப் பொருட்படுத்தியதே யில்லை.

தற்போது வின்ட்ஸர் கோமகனாக விளங்கும் எட்டாவது எட்வர்ட், வேல்ஸ் இளவரசராக நம் நாட்டைச் சுற்றிப் பார்க்க வந்தபோது, 'திரும்பிப் போ!' என்று கோஷம் செய்து, கறுப்புக்கொடி மரியாதை காட்டி, பகிஷ்காரம் செய்து அவரை ஊருக்கு அனுப்பி வைத்தது எல்லோருக்கும் நன்றாகத் தெரியும்.




ஆனால், இளவரசி எலிஸபெத் பாக்கியசாலி. அத்தனை பேருக்கும் கிடைக்காத பாக்கியம் அவருக்குக் கிடைத்திருக்கிறது.

எலிஸபெத் இளவரசியின் திருமணத்தின்போது நம்முடைய மதிப்பிற்குரிய அருமைத் தலைவர் காந்திஜி, பிரதம மந்திரி நேரு உள்பட நம் தலைவர்கள் பலரும் அவருக்கு ஆசிச் செய்திகள் அனுப்பியது மாத்திரம் அல்லாமல், பல பரிசுகளையும் மனமுவந்து அளித்திருக்கிறார்கள். இந்தியா தேசம் முழுவதும் இந்தத் திருமணத்தில் சிரத்தை காட்டுகிறது. இதற்குக் காரணம் என்னவென்பதைச் சொல்ல வேண்டியதில்லை.

பிரிட்டன் தன்னை எஜமான ஸ்தானத்திலிருந்து விடுவித்துக் கொண்டு இந்தியாவுக்குச் சுதந்திரம் கொடுத்ததேயாகும்.

கோடிக்கணக்கான இந்திய மக்களுடைய அன்பையும் நல்லெண்ணத்தையும் ஆசியையும் பெற்றுக்கொண்டு திருமணம் செய்து கொண்ட எலிஸபெத் இளவரசி பாக்கியசாலியே அல்லவா?

இத்தகைய பாக்கியசாலியின் கையைப் பிடித்திருக்கும் மணமகன் பிலிப் மௌண்ட்பாட்டன் இன்னும் ரொம்பப் பெரிய பாக்கியசாலியாகத்தான் இருக்க வேண்டும்.

பிலிப் மௌண்ட்பாட்டன் நம்முடைய கவர்னர் ஜெனரல் லார்ட் லூயி மௌண்ட்பாட்டனுடைய மருமகன். பிரிட்டிஷ் கப்பற் படையிலே பெரிய பதவி வகித்து வந்தவர். பிரிட்டிஷ் பிரதம மந்திரி ஆட்லி கூறியுள்ளதைப் போல, "கடமையில் கருத்து, குணம், அறிவு எல்லாம் படைத்தவர்" பிலிப்.

தம்பதிகள் இருவருக்கும் மீண்டும் மங்கள வாழ்த்துக் கூறுகிறோம். அவர்கள் சந்தோஷமாகவும் சௌக்கியமாகவும் வாழ இறைவன் அருள் புரியட்டும்!




மலர் 7 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 17

# என்ன சேதி?

## பிச்சப்பா பிரிந்தார்!

தமிழ் நாட்டில் காந்தீயத்தை வளர்த்த முக்கியமான பகுதிகளில் செட்டிமார் நாடு ஒன்று. முப்பது ஆண்டுகளுக்கு முன்னால் செட்டிமார் நாட்டில் காந்தீயம், கதர் அணிதல், காங்கிரஸ் பற்று முதலியவற்றை உண்டாக்கி வளர்த்தவர்களில் ஸ்ரீ பிச்சப்பா சுப்பிரமண்யம் தலை சிறந்தவர். தேச விடுதலையில் அவர் ஆர்வம் கொண்டிருந்தது போல் சமூக சீர்திருத்தத்திலும் தீவிர வாதியா யிருந்தார். சமூகத்தின் அர்த்த மற்ற குருட்டு வழக்கங்கள் பலவற்றை எதிர்த்துப் போராடினார். தமது வாழ்க்கையிலேயே சமூக சீர்திருத்தங்களை நிறைவேற்றி இலட்சிய புருஷராக விளங்கினார். பாரதியாரின் பாடல்களை வேத வாக்காகக் கொண்டு பக்தி செலுத்தினார். தமிழன்பில் தலைசிறந்து விளங்கினார். செட்டிமார் நாட்டிலே மட்டுமன்றித் தமிழ் நாடெங்கும் பல சிறந்த நண்பர்களைப் பெற்றிருந்தார்.

இத்தகைய உத்தம புருஷர் இம்மாதம் 13உ காலமானதை அறிந்து மிக்க துயருற்றோம். அவருடைய அருமைப் புதல்வர் சுப. கண்ணன் அவர்களுக்கும், நாடெங்குமுள்ள அவருடைய பல நூறு நண்பர்களுக்கும் நமது மனமார்ந்த அநுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

## காப்பிக் கொட்டைப் பஞ்சம்

சிற்சில முக்கியமான பொருள்களுக்குத் திடீரென்று பஞ்சம் சேர்கிற அதிசயத்தை அடிக்கடி இந்த நாளில் பார்த்து வருகிறோம். ஏதாவது ஒரு பொருளுக்குக் கண்ட்ரோல் ஏற்படுத்தினால் உடனே அது மாயமாய் மறைந்து பஞ்சம் வந்துவிடுகிறது. கண்ட்ரோலை எடுத்தாலோ விலை ஒன்றுக்கு மூன்று மடங்கு ஆகிவிடுகிறது. சில சமயம் "விலை அதிகமானாலும் பரவாயில்லை; பொருள் கிடைத்தால் போதும்" என்ற நிலைமையும் ஏற்படுகிறது. தென்னிந்தியர்களுக்கு மிக முக்கியமான வாழ்க்கைப் பொருளாய்ப் போய்விட்ட காப்பிக் கொட்டைக்குச் சில நாளாய்ப் பஞ்சம் ஏற்பட்டிருப்பதைப் பார்த்து வருகிறோம். காப்பிக் கொட்டைக் கடைகளில் 'க்யூ' வரிசையில் நின்று அரைக்கால் பவுண்டு, கால் பவுண்டு வாங்கிக்கொண்டு போகும் நிலைமை ஏற்பட்டு விட்டது. இதற்குக் காரணம் என்னவென்று கண்டு பிடிப்பது எளிதாயில்லை. ஏனெனில் காப்பிக் கொட்டைக் கண்ட்ரோல் சமீபத்தில் ஏற்படவில்லை; பத்து வருஷத்துக்கு முன்னதாகவே காப்பித் தோட்டக்காரர்கள் அரசாங்கத்தை மன்றாடிக் கேட்டு விலைக் கண்ட்ரோல் ஏற்படுத்திக் கொண்டார்கள். திடீரென்று காப்பிக் கொட்டை விளைவு குறைவாகி விட்டதா என்று ஆராய்ந்தால், "இல்லை; வேண்டிய காப்பிக் கொட்டை இருக்கிறது!" என்று காப்பி மார்க்கெட்டிங் போர்டார் அறிக்கை விடுகிறார்கள். எனவே, காப்பிக் கொட்டை விற்கும் சில்லறை வியாபாரிகள் செய்யும் அக்கிரமமாகத்தான் இருக்கும் என்று பலரும் கோபிக்கலாயிற்று. ஆனால் ஒரு கப் 'ஸ்ட்ராங் காப்பி' சாப்பிட்டுவிட்டு மறுபடியும் காப்பி மார்க்கெட்டிங் போர்டின் அறிக்கைகளை ஆராய்ந்தால், காப்பிக்கொட்டை விற்கும் கடைக்காரர்கள் மேலே தவறில்லை என்று தெரிய வந்தது. சென்னைக்கு மாதம் 150 டன் காப்பிக் கொட்டை தேவையாயிருக்கும்போது 67 டன் காப்பிக்கொட்டை மட்டும் 'சப்ளை' யானால், கடைக்காரர்கள் என்ன செய்வார்கள்? ஆகக்கூடி, எல்லாவற்றையும் கவனித்துப் பார்த்தால், காப்பி மார்க்கெட்டிங் போர்டாரும், காப்பி மார்க்கெட்டிங் ஆபீஸர் ஸ்ரீ வெள்ளோடியும் செய்யும் திரிசமன்கள்தான் காப்பிப் பஞ்

சத்துக்குக் காரணம் என்று ஏற்பட்டது. காப்பித் தோட்டக்காரர்கள் "அகவிலை உயர்ந்து விட்டது; ஆகையால் காப்பிக் கொட்டையின் விலையும் உயரவேண்டும்" என்றார்களாம். இதற்கு இந்திய சர்க்காரின் அனுமதி தேவை. எனவே, மேற்படி பிரச்னை முடியும் வரையில் காப்பிக் கொட்டை 'சப்ளை'யைக் குறைத்துவிட்டிருக்கிறாராம் மகானுபாவர் ஸ்ரீ வெள்ளோடி! பிரபல காப்பிக் கொட்டை முதலாளிகள் அடங்கிய காப்பி மார்க்கெட்டிங் போர்டும் ஒத்துக்கு மத்தளம் போடுகிறதாம். தீபாவளிக்கு 50 டன் காப்பிக் கொட்டை 'சாங்ஷன்' செய்திருப்பதாகப் பத்திரிகைகளில் போட்டுவிட்டு உண்மையில் 20 டன்தான் கொடுத்தார்களாம். இந்த அநியாயத்துக்கெல்லாம் விமோசனம் எப்போது பிறக்குமோ தெரியவில்லை.

"ஒன்று, தென்னிந்தியர்களின் காப்பி அருந்தும் வழக்கமாவது போய்த் தொலைய வேண்டும்; அல்லது மகானுபவர் ஸ்ரீ வெள்ளோடியாவது தொலைந்து அருள வேண்டும்!" என்ற நெருக்கடியான நிலைமை ஏற்பட்டிருக்கிறது. இரண்டில் எந்தத் தொலைவு நல்லது என்று நினைக்கிறீர்கள்?

## பிரகஸ்பதிகளுக்குப் பதில்

இந்தியா முழுதும் காங்கிரஸ் சர்க்காரின் ஆட்சி ஏற்பட்டு விட்டது. அப்படியிருந்தும், காங்கிரஸ் தலைவர்கள் என்ன சாதித்து விட்டார்கள்? அவர்கள் கூறிய உறுதி மொழிகளெல்லாம் என்னவாயின? பசிப் பிணி பறந்து போய் விட்டதா? தொழிலாளர்களின் கஷ்டங்கள் குறைந்து விட்டனவா? இப்படியெல்லாம் கேள்விகள் கேட்கும் பிரகஸ்பதிகளுக்கு, ஐக்கிய மாகாண கவர்னரான ஸ்ரீமதி ஸரோஜினி தேவி தகுந்த பதில் அளித்திருக்கிறார். கோடிக்கணக்கான ஜனங்கள் உய்வதற்கான திட்டங்களை ஒரு மாதத்திலோ, அல்லது ஒரு வருஷத்திலோ நிறைவேற்றிவிட முடியாது என்பதுதான் கவியரசி அளித்துள்ள பதில். உலகிலுள்ள நாடுகள் பத்து வருஷத் திட்டம், ஐந்து வருஷத் திட்டம் என்று திட்டங்கள் வகுத்தே வேலை செய்கின்றன. அப்படியிருக்கும்போது, அதிகாரத்தை ஏற்றுக் கொண்டு சில மாதங்கள்கூடப் பூர்த்தியாகாத காங்கிரஸ் சர்க்கார் மீது கண்டன மாரி பொழிவோரின் கெட்டிக்காரத்தனத்தை என்னவென்று சொல்வது?

---

# சென்னை சர்க்கார் ஜரூர்



# வழி காட்டுகிறது

பாற்கடலைக் கடைந்தபோது விஷம் பொங்கி வந்தது. சிவபெருமான் அதை அருந்தி உலகத்தைக் காப்பாற்றினார்!

அமிருதமும் வந்தது. அசுரர்கள் அதை அபக்கென்று விழுங்கிவிடப் பார்த்தார்கள். ஆனால், அவர்களின் முயற்சி பலிக்கவில்லை. மீண்டும் உலகம் காப்பாற்றப்பட்டது!

மகத்தான நற் காரியங்களுக்குப் பிரமாதமான இடையூறுகள் ஏற்படுவது தவிர்க்க முடியாததாகும். அன்றைய சம்பவங்களும் இன்றைய சம்பவங்களும் அந்த உண்மையை நிரூபிக்கின்றன.

அடிமை அந்தகாரம் அகன்றுவிட்டது. ஆனால், அது அகன்றதன் பலனை அனுபவிக்க முடியாமல் பாரத நாட்டை அஞ்ஞான அந்தகாரமானது ஆட்கொண்டிருக்கிறது.

அடைந்த சுதந்திரத்தை அபக்கென்று விழுங்க ஆயிரம் பூதங்கள்,—பிரச்னைகள் காத்துக் கொண்டிருக்கின்றன.

அவைகளிலிருந்து மக்களைக் காப்பாற்ற வேண்டிய பொறுப்பு நமது மாபெருந் தலைவர்களின் தலையில் சுமந்திருக்கிறது.

ஐம்பது ஆண்டுகளுக்கு மேலாக தியாக அக்னியில் மூழ்கி அதிக சோபையுடன் விளங்கும் தலைவர்கள், ஐந்து மாதங்களாக நிகழ்ந்து வரும் சம்பவங்களைக் கண்டு அஞ்சிவிடப் போவதில்லை.

பாரதகண்டமெங்கும் அடிமை அந்தகாரத்தை அகற்றி அரசியல் ஒளி வீசும்படி செய்த அருமைத் தலைவர்கள், சில பகுதிகளிலுள்ள ஜனங்களின் அஞ்ஞான இருளையும் போக்கி அவர்கள் அருள் ஒளி பெறும்படி செய்யும் தொண்டை ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள்.

அந்தத் தலைவர்களின் லட்சியத் தைய, அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின் தீர்மானங்கள் விவரிக்கின்றன.

இவ்வாரம் டில்லியில் நடந்த மேற்படி கமிட்டிக் கூட்டத்தில் நிறைவேறியுள்ள தீர்மானங்கள், குழப்பமடைந்துள்ள இந்திய மகா ஜனங்களுக்கு எதிர்காலத்தில் உற்ற வழியைக் காட்டுவதாக இருக்கின்றன: இந்தியாவின் எதிர்கால நிலைமையும் நிர்ணயிப்பதாக இருக்கின்றன.

• • •

தேச க்ஷேமத்திற்கான அரும் பெரும் காரியங்கள் வெற்றிகரமாக நிறைவேற வேண்டுமாயின், காங்கிரசுக்கும் இந்திய சர்க்காருக்கும் அற்ப அபிப்பிராயபேதமும் இருக்கக்கூடாது.

எனவே, இந்திய சர்க்காருடன் அபிப்பிராயபேதம் ஏற்பட்டுள்ள ஆச்சாரிய கிருபளானி காங்கிரஸ் தலைமைப் பதவியை ராஜினாமா செய்தது முற்றிலும் நியாயமேயாகும்.

எனினும், சரித்திரத்திலேயே கண்டறியாத கொந்தளிப்புகளும் கொலைப் பாதகங்களும் பாரத நாட்டை அல்லோல கல்லோலப் படுத்தி வந்தும், இந்திய சர்க்கார் நிர்வாகத்தை ஏற்றுக் கொண்டுள்ள தலைவர்கள் நிதானத்தை இழந்துவிடவில்லை.

வீரர்களின் தீரம் போர்க்களத்தில் பிரகாசிப்பது போல, நம் தலைவர்களின் திறமையும் நெஞ்சைப் பிளக்கும் நெருக்கடியான சமயத்தில் குன்றின் மேலிட்ட தீபம்போல் பிரகாசித்து வருகிறது.

"உச்சிமீது வானிடிந்து
வீழுகின்ற போதிலும்
அச்சமில்லை, அச்சமில்லை
அச்சமென்பதில்லையே!"

என்பதற்கு நமது தலைவர்கள் உதாரண புருஷர்களாகத் திகழ்ந்து வருகின்றார்கள்.

ஏற்கெனவே இரண்டு தடவை ராஷ்டிரபதி பீடத்தை அலங்கரித்தவரும், தேசத் தொண்டே உருவெடுத்தவருமான பாபு ராஜேந்திர பிரசாத் மூன்றாவது தடவையாக அப்பதவியை ஏற்றுக் கொண்டிருப்பது, நம் தேசத்தின் எதிர்கால க்ஷேமத்துக்கு ஒரு சுப சூசகமாகும் என்று கூறலாம்.

டிடீரென்று, 'காங்கிரஸ் தலைமைப் பதவியை ஏற்றுக் கொள்ளுங்கள்' என்று ஜனப் பிரதிநிதிகள் கட்டளை யிட்டதும், அவ்விஷயமாக ஆலோசிக்கச் சில மணி நேரமாவது அவகாசம் வேண்டுமென்று பாபு ராஜேந்திரர் கேட்கவில்லை. பிரமாதமான பொறுப்பு வாய்ந்த அந்தப் பதவியை உடனே ஏற்றுக்கொண்டார்; இந்திய சர்க்கார் மந்திரி பதவியை ராஜினாமா செய்தார்.

பாபு ராஜேந்திரரின் மேற்படி சிரிய செய்கையானது, பதவியைக் காட்டிலும் தொண்டுதான் பிரதானம் என்பதையே காட்டுகிறது.

* * *

சிறுபான்மையோர் விஷயமாகவும், அகதிகள் பிரச்னையை யொட்டியும் அக் கமிட்டி ஏற்கெனவே நமது தலைவர்கள் கொண்டுள்ள கருத்தையே மீண்டும் வலியுறுத்தி யிருக்கிறது.

அதாவது, வகுப்பு வெறிக்குப் பயந்து ஜனங்கள் சொத்துச் சுதந்திரத்தை யெல்லாம் விட்டு ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்துக்கு ஓடும் பரிதாப நிலைமைக்கு முற்றுப்புள்ளி வைக்க வேண்டும். இந்தியாவிலும் சரி, பாகிஸ்தானிலும் சரி, ஆங்காங்குள்ளவர்கள்—அவர்கள் எந்த ஜாதியினராயினும், எந்த மதத்தினராயினும், எந்தப் பிரிவினராயினும், அமைதியாகவும் பயமின்றியும் வாழ வேண்டும். அகதிகள் மீண்டும் அவரவர் இருக்குமிடங்களுக்குச் செல்ல வழிவகை செய்யவேண்டும்.

இதுதான் காங்கிரஸ் கமிட்டி நிறைவேற்றியுள்ள தீர்மானமாகும்.

ஆனால், மேற்படி தீர்மானத்தைப் பாகிஸ்தான் சர்க்காரின் ஒத்துழைப்பின்றி அமுலுக்குக் கொண்டு வருவதென்பது முடியாத காரியம்.

ஜாதி, மத வேற்றுமை இந்திய சர்க்காருக்கு இல்லையென்பது உலகமறிந்த உண்மை.

ஆனால், சகலருக்கும் பிரஜா உரிமை உண்டு என்ற ஜனநாயகத் தத்துவத்துக்கு நேர் முரணான மதத் துவேஷத்தை அஸ்திவாரமாகக் கொண்ட பாகிஸ்தான் சர்க்கார் அம்முறையைக் கைவிட வேண்டும்.

* * *

சுதந்திர இந்தியாவில் இன்னும் கூட ஏதேச்சாதிகாரம் செலுத்தி வரும் மன்னர்களை எச்சரித்து அ. இ. கா. கமிட்டி நிறைவேற்றியுள்ள தீர்மானமும் முக்கியமானதாகும்.

சமஸ்தானங்களில் பொறுப்பாட்சி முறையை ஏற்படுத்தத் தவறும் மன்னர்களைக் காங்கிரஸ் காப்பாற்றாது என்று தீர்மானம் வியக்தமாகக் கூறுகிறது.

பிரிட்டிஷாரின் பக்க பலம் இருந்த வரையில் இந்திய மன்னர்களின் ஏதேச்சாதிகார தர்பாருக்கும் இடமிருந்தது. இனி அதற்கு இடமில்லை.

இந்த உண்மையை உணராமல் இன்னும் தங்களுக்கு ஏதோ சர்வ வல்லமையிருப்பதாகக் கனவு கண்டு வரும் மன்னர்களுக்கு மேற்படி தீர்மானம் ஓர் அருமருந்தாய் அமையுமாக!

* * *

"தடி யெடுத்தவன் தண்டல்காரன்" என்று சொல்லுவதுண்டு.

தனிப்பட்ட சில ஸ்தாபனங்களும் இன்று தங்களுக்கென ஒரு ராணுவத்தை ஏற்படுத்தி வருகின்றன.

மேற்படி வழக்கம் ஒழிய வேண்டுமென்பதும் கமிட்டித் தீர்மானங்களில் ஒன்றாகும்.

அத்தகைய 'ராணுவம்' தேசத்தின் க்ஷேமத்துக்கும், மகத்தான தியாகங்கள் புரிந்து கஷ்டப்பட்டுப் பெற்ற சுதந்திரத்துக்கும் ஆபத்தானதென்றும் கமிட்டி குறிப்பிட்டிருக்கிறது.

வகுப்பு வாதத்தை ஆதாரமாகக் கொண்ட ஸ்தாபனங்களின் ராணுவம், ஜனங்களுக்குப் பாதுகாப்பளிப்பதென்பது முடியாத காரிய மல்லவா?

ஜனங்களையும், தேசத்தையும் பாதுகாக்கும் பொறுப்பு சர்க்காருக்கு இருக்கும்போது, தனிப்பட்ட ஸ்தாபனங்கள் எதற்காகப் படைகளை ஏற்படுத்திக் கொண்டு படாடோபம் செய்ய வேண்டுமென்பதுதான் தெரியவில்லை.

மற்றும் ஹிந்துமகா சபை, முஸ்லிம் லீக், அகாலி தளம் போன்ற வகுப்பு வாத ஸ்தாபனங்களை அ. இ. கா. கமிட்டி கண்டித்திருப்பதுடன், அத்தகைய ஸ்தாபனங்களுக்கும் தேச நலன்களுக்கும் சம்பந்தமில்லை யென்பதையும் எடுத்துக் காட்டி யிருக்கிறது.

தேசத்தின் பொருளாதார நலன்களையும் கமிட்டி மறந்து விடவில்லை. காலத்துக் கேற்ப, அவ்விஷயமாகத் தீவிரமான முறைகளையும் கைக்கொள்ளத் தீர்மானித்திருக்கிறது.

அதாவது, தேசத்தின் பொருளாதார அமைப்பு சீர்திருந்த வேண்டும்; உற்பத்தி உச்ச நிலையை அடைய வேண்டும்; பணமெல்லாம் ஒரு சாராருக்கு, பாடெல்லாம் மற்றொரு சாராருக்கு என்ற அநீதி ஒழிய வேண்டும். — எவ்வளவு அற்புதமான தீர்மானம், பாருங்கள்!

அது வெறும் ஏட்டுச் சுரைக்காயல்ல.

அத் தீர்மானத்தை அமுலுக்குக் கொண்டு வருவதற்காகத் தகுந்த பொருளாதாரத் திட்டமொன்றை வகுக்க ஒரு கமிட்டியும் நியமிக்கப்பட்டிருக்கிறது.

• • •

நம் தேசத்தை மாத்திரமல்ல, உலகிலுள்ள பல தேசங்களையும் ஆட்டி வைத்து இடைவிடாத தலை வலியையுண்டு பண்ணி வரும் கண்ட்ரோல்கள் விஷயமாகக் கமிட்டி ஆய்ந்தோய்ந்து ஒரு முடிவுக்கு வந்திருக்கிறது.

தவிர்க்க முடியாத பீடைகள் என சில வர்க்கங்கள் உண்டு.

அவை பீடைகள்தான்; இருந்தாலும் தவிர்க்க முடியாதவை!

கண்ட்ரோல்களும் மேற்படி வர்க்கத்தைச் சேர்ந்தவையே.

பல்வேறு கிருமிகளுக்கும் குட்டைகள் உற்பத்தி ஸ்தானமாக இருப்பது போல், கறுப்பு மார்க்கெட், பதுக்கி வைத்தல், லஞ்சம் போன்ற விபரீதங்களுக்கும் கண்ட்ரோல்கள் உற்பத்தி ஸ்தானமாக இருக்கின்றனவென்பதை அ. இ. கா. கமிட்டி மறைக்கவில்லை.

கண்ட்ரோல்கள் சமுதாய வாழ்க்கையையே சீர்குலைத்திருக்கின்றனவென்றும், ஆகையால் அவைகளை ஒழித்து விட வேண்டுமென்றும் மகாத்மா காந்தி அடிக்கடி கூறி வருகின்றார்.

அவை, ஜனங்கள் தன்னம்பிக்கையை இழக்கும்படி செய்திருக்கின்றன. உற்பத்தி பெருகாமல் தடுத்திருக்கின்றன. குறிப்பாக, உணவுப் பொருள்கள், கரர் இவற்றின் உற்பத்தி கண்ட்ரோல்களால் பெரிதும் பாதிக்கப்பட்டிருக்கிறது.

எனவே, பொதுஜன நன்மைக்கு முரணின்றி கூடிய சீக்கிரம் கண்ட்ரோல்களை ரத்துச் செய்யும் விஷயத்தில் இந்திய சர்க்காரும் மாகாண சர்க்கார்களும் அவசரமாகக் கவனம் செலுத்த வேண்டுமென்பது கமிட்டியின் தீர்மானமாகும்.

உற்ற சமயத்தில் மிகவும் புத்திசாலித்தனமாகச் செய்யப்பட்டுள்ள அத்தீர்மானம் பாராட்டத் தக்கது.

மகாத்மா காந்தியின் யோசனைக்கு மரியாதை காட்டியுள்ள கமிட்டியார், கண்ட்ரோல்களையெல்லாம் உடனடியாக எடுத்துவிட வேண்டுமென்று கூறி, விஷப் பரீட்சை செய்து பார்க்க விரும்பவில்லை.

ஏனெனில், சென்ற பல வருஷங்களாகக் கண்ட்ரோல் முறைகளுக்கு உட்பட்டு இருக்கும் விலைகள், திடீரென்று கட்டுப்பாடுகளை அகற்றுவதன் விளைவாகத் தாறுமாறாகி விடும்.

உணவுப் பொருள்களைத் தவிர மற்றவைகளுக்குக் கண்ட்ரோலை ரத்துச் செய்து விடுவதால் குடி முழுகிப் போய் விடாது. சர்க்காரின் சக்தியின் பெரும் பகுதியை உறிஞ்சி வரும் கண்ட்ரோல்கள் எவ்வளவுக் கெவ்வளவு சீக்கிரமாக ஒழிகின்றனவோ, அவ்வளவுக் கவ்வளவு நாட்டுக்கு நல்ல காலம் என்று சொல்லலாம். ஆனால், முக்கிய உணவுப் பொருள்கள் விஷயத்தில் சர்க்கார் மிகவும் ஜாக்கிரதையாக நடந்துகொள்ள வேண்டும்.

தேவைக்குத் தகுந்த உற்பத்தி இராததே இன்றைய கஷ்ட நிலைமைக்குக் காரணம். அப்படியிருக்க, கண்ட்ரோல்களைத் திடீரென எடுத்து விடுவதால் பல அனர்த்தங்கள் ஏற்படக் கூடும். ஏழைகளுக்கு உணவுப் பொருள்கள் கிடைப்பது மிகவும் துர்லபமாகி விடும். கிடைத்தாலும் விலைகள் விஷம்போல் ஏறிவிடும்.

எனவே, கண்ட்ரோல்களை ரத்துச் செய்யுமுன் உணவுப் பொருள்களின் உற்பத்தி அதிகமாவதற்கான தீவிர முறைகளைக் கைக்கொள்ள வேண்டியது அத்தியாவசியமாகும்.

அவ்விஷயமாக, பிரசாரம் மாத்திரம் போதாது; உருவான திட்டங்களையும் வகுக்க வேண்டும்.

இவ்வாறாக, சுதந்திர இந்தியாவில் நடந்துள்ள அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின் முதல் கூட்டம், இந்த நெருக்கடியான சமயத்தில் சமுதாய, அரசியல், பொருளாதாரத் துறைகளில் சர்க்காருக்கும் மகா ஜனங்களுக்கும் சரியான வழியைக் காட்டியிருக்கிறது என்பதில் சந்தேகமில்லை.




# கம்பர் தரும் காட்சி

• • •

## 195. குன்று அதோ தகருகிறது!

"வாலி இருக்கும் இடத்தைக் காட்டு இப்போதே!" என்று ராமன் சொன்னானே இல்லையோ, அப்படியே புறப்பட்டு விட்டான் சுக்கிரீவன். ராமனும் பின் தொடர்ந்தான்.

வாலி இருந்த குன்றின் பக்கமாகப் போனார்கள். அங்கே ஒரு சமவெளியான மைதானம். சுற்றிலும் மரங்களும் புதர்களும் அடர்ந்திருந்தன. ராமனும் லக்ஷ்மணனும் புதர் அடர்ந்த ஒரு இடத்தில் இருந்து கொண்டார்கள். சுக்கிரீவன் மாத்திரம் வாலியின் வீட்டு முற்றத்துக்கு எதிர்போய் அங்கு நின்று கொண்டு, வீர வார்த்தைகள் பேசி வாலியைப் போருக்கு அழைத்தான். அவனுடைய வீர ஆரவாரம் பெரிய முழக்கமாய் இருந்தது. அந்த முழக்கம் வீட்டுக்குள் படுத்திருந்த வாலியின் காதில் விழுந்தது. ஏதோ யானை, மதயானைதான் கத்துகிறது என்று வைத்துக்கொள்ளுவோம். அதைக் குகைக்குள் இருக்கிற சிங்கம் எப்படிப் பொருட்படுத்தாது ஏற்குமோ அப்படித்தான் ஏற்கிறான் தம்பியின் ஆர்ப்பாட்டத்தை, வாலி.

மால்பெருங் கடகரி
முழக்கம், வான்அரி
ஏற்பது செவித்தலத்(து)
என்ன, ஓங்கிய
ஆர்ப்பொலி கேட்டனன்
அமளி மேல்ஒரு
பாற்கடல் கிடந்ததே
அனைய பான்மையான்.

[மால்பெருங் கடகரி முழக்கம்: அச்சத்தைத் தரும்படியான பெரிய மதயானையின் முழக்கத்தை; வான் அரி ஏற்பது செவித்தலத்து என்ன: பெருவலி படைத்த ஒரு சிங்கம் காதில் ஏற்ற மாதிரி; ஓங்கிய ஆர்ப்பொலி கேட்டனன்: சுக்கிரீவனது ஆரவாரத்தைக் கேட்டான்; அமளிமேல் ஒரு பாற்கடல் கிடந்ததே அனைய பான்மையான்: கட்டிலின் மேல் ஒரு பாற்கடல் கிடந்ததோ என்று சொல்லும்படியான வாலி—வாலியின் நிறம் ஒரே வெண்மை.]

•••

ஏதோ கோபங் கொண்டவனாய், போர் செய்யவே வந்திருக்கிறான் தம்பி என்று தெரிந்து கொஞ்சம் யோசனை பண்ணினான் வாலி.

உருத்தனன் போர எதிர்ந்(து)
இளவல் உற்றமை,—
வரைத்தடத் தோளினன்
மனத்தின் எண்ணினன்:
சிரித்தனன்: அவ்வொலி
திசையின் அப்புறத்(து)
இரித்த(து) அவ் உலகம்ஓர்
ஏழொ(டு) ஏழுமே.

[உருத்தனன் போர எதிர்ந்து இளவல் உற்றமை: கோபங் கொண்டவனாய்ப் போர் செய்யவே வந்திருக்கிறான் தம்பி என்பதை; வரைத்தடத் தோளினன்: மலையை ஒத்த தோள் கொண்ட வாலி; மனத்தின் எண்ணினன்: கொஞ்சம் யோசனை செய்தான்; யோசனை செய்ததில் சிரிப்புத்தான் வந்தது! அவ்வொலி: அந்தச் சிரிப்பின் முழக்கமானது; திசையின் அப்புறத்து: நாலு திசை



ராஜாஜி கவர்னர் - ஜெனரல் உத்தியோகம் ஏற்பதற்காகப் புது டில்லி சென்றபோது விமான நிலையத்தில் சர்தார் வல்லபாய் முதலியவர்கள் வரவேற்றார்கள்.

களுக்கும் அப்பால் கிடந்துள்ள; உலகம் ஏழோடு ஏழையே; பதினாறு உலகங்களையுமே; இரிந்தது; அஞ்சி நடுங்கச் செய்தது.]

.·.

அப்படியே படுக்கையை விட்டு எழுந்தான் வாலி. ஒரே கோபமாய்க் கையோடு கையைப் புடைத்தான். பூமியை எட்டுத் திக்குகளிலும் நின்று தாங்கிக் கொண்டிருக்கும் மதயானைகளே அச்சத்தினால் சோர்ந்துபோயின என்றால், கேட்பானேன் மற்றவைகளின் பாடு!

> கைக்கொடு கைத்தலம்
> புடைப்பக்,— காவலின்
> திக்கயக் களும்மதச்
> செருக்குச் சிந்தின,
> உக்கன உரும்இனம்,
> உலைந்த உம்பரும்,
> தெக்கென நெரிந்தன
> நின்ற குன்றமே.

[காவலின் திக்கயங்களும்: பூமியைத் தாங்கிக் கொண்டிருக்கிற அஷ்ட திக்கு கஜங்களும்: மதச் செருக்குச் சிந்தின: மதத்தினால் உண்டாகிய வீரமும் பெருமிதமும் அவைகளை விட்டு நீங்கின: சிந்தின: இழந்தன: உக்கன உரும் இனம்: இடியினங்கள் நாலா பக்கமும் சிதறுண்டு விழுந்தன: உலைந்த உம்பரும்: வான் முகடும் உடைந்து போய் விட்டது: தெக்கன நெரிந்தன நின்ற குன்றமே: நிலையாய் நின்றுள்ள குன்றுகள் தான் தூளாய்த் தகர்ந்து போய் விடுமோ என்று தோன்றியது.]

வாலியின் அளவிறந்த ஆற்றலையும் வீரத்தையும் எடுத்துச் சொல்ல வருகிறார் கம்பர். கைகளைப் புடைத்த அதிரொலியால் நடுங்கின என்று கண்ணுக்குப் புலனாகாத திக்கு கஜங்களில் ஆரம்பித்து, இடியென்றும் வான் முகடு என்றும் சொல்லி விட்டுக் கடைசியாகக் கண்முன் நிற்பதான குன்றைக் காட்டி, அதுவும் 'அதோ தகருகிறது!' என்று சொல்லுகிறார். பெருமிதத்துக்கு உரிய பாவம் அபூர்வமாய் அமைந்திருக்கிறது செய்யுளில்.

# ஆகாச வெடி

"அணுகுண்டின் ரகசியம் அம்பலமாகி விட்டால் அதைக் கொண்டு இனிமேல் பயமுறுத்த வேண்டாம்" என்று மாலடோவ் அமெரிக்கர்களை எச்சரிக்கிறார்.

—நியூயார்க் செய்தி.

இந்த எச்சரிக்கையே அமெரிக்கர்களுக்கு ஒரு 'அணுகுண்டு' போல் இருந்திருக்கும்.

★

"இந்த வருஷ முடிவிற்குள் பாலஸ்தீனத்தில் பிரிட்டனின் மாண்டேட் நிர்வாகம் முடிய வேண்டும்."

—ஐ. நா. சபையில் ரஷ்யா.

மாண்டேட தீரும் என நாமும் எதிர்பார்க்கலாமல்லவா?

★

"விறகு வியாபாரிகளின் குறைகளை சர்க்கார் கவனித்து நிறைவேற்ற வேண்டும்."

—ஒரு கோரிக்கை.

சரி, சரி! அந்த வியாபாரிகள் தங்கள் நிறையிலுள்ள குறை(வு)களைக் கவனிப்பார்களா?

★

"டாக்டர்களிடமிருந்து நோயாளிகள் வாங்கும் மருந்துகளுக்கு விற்பனை வரி விதிக்கக் கூடாது."

—ஒரு கோரிக்கை.

பச்சைத் தண்ணீருக்கு வரி விதிப்பது அநியாயந்தானே?

★

"ரேடியோக்களுக்கு விற்பனை வரியிலிருந்து விதிவிலக்கு அளிக்க வேண்டும்."

—தெ. இ. ரேடியோ வியாபாரிகள்.

வாங்குவதற்கு வரி விதித்தாலும் விதிக்காவிட்டாலும், ரேடியோ வைத்திருப்பதற்குக் கடுமையான வரி விதிக்கவேண்டும் என்று காப்பி ஹோட்டலுக்குப் பக்கத்திலிருக்கும் குடித்தனக்காரர் கூறுகிறார்.

"துபாயிலிருந்து ஒரு கப்பலில் சென்னைக்குச் சர்க்கரை வருகிறது."

—பத்திரிகைச் செய்தி.

மிகவும் ருசிகரமான செய்திதான்!

★

"ஹைதராபாத்தில் ஆர்ப்பாட்டக்காரர்கள் ஒரு விறகு டிப்போவுக்குத் தீ வைத்தனர்."

—செய்தி.

அந்த விறகு டிப்போ சொந்தக்காரர்களுக்கு வயிறு பற்றி எரிந்திருக்கும்.

★

"உழும்பொழுது கிடைத்த பல நாணயங்களைச் சில உழவர்கள் அயோத்தி போலீஸ் ஸ்டேஷனில் ஒப்படைத்தனர்."

—தினசரியில் ஒரு செய்தி.

மிகவும் நாணயமாகத்தான் அந்த உழவர்கள் நடந்து கொண்டிருக்கிறார்கள்.

★

"உருளைக் கிழங்குக் கட்டுப்பாடுகளை நீக்கிவிடச் சர்க்கார் தீர்மானித்து விட்டனர்."

—சர்க்கார் அறிக்கை.

இனி உருளைக் கிழங்குப் பிரியர்களைக் கட்டிப் பிடிக்க முடியாது!

★

"அமெரிக்க விவசாய இலாகா இந்தியாவிற்கு டிசம்பர் மாதத்திற்கென்று 54,500 டன்கள் கோதுமை மாவு அனுப்பியுள்ளது."

—வாஷிங்டன் செய்தி.

இதைக் கேட்டதில் நம்மில் பலர் 'பூரி'த்துப் போயிருக்கக் கூடும்.

★

"பிரபல டாக்டர் ஒருவர் நீடூழி வாழ வழி என்ன என்பதை ஆராய்ச்சி செய்துகொண்டிருக்கிறார்."

—வைத்தியக் கட்டுரை.

மேற்படி டாக்டர் நீடூழி வாழ்ந்து ஆராய்ச்சியை முடிவு செய்யட்டும்!

# தீபங்கள்

க. ரா.



நிழலின் அருமை வெய்யிலில் இருந்தவர்களுக்குத்தான் தெரியும் என்பது போல், தீப ஒளியின் அருமை இருட்டடிப்புக் காலத்தில் இருந்தவர்களுக்குத்தான் தெரியும்.

கடவுளுக்குக்கூட விளக்கின் ஒளி அவசியம் என்று தெரிகிறது. கிறிஸ்தவ வேதத்தில் கர்த்தர் முதன் முதலில் வெளிச்சத்தை உண்டாக்கிக் கொண்டு பிறகுதான் தம்முடைய சிருஷ்டிகளைத் தொடங்கினார் என்று படிக்கிறோம். இவ்விதம் கடவுளுக்கே இன்றியமையாத தீபம் நம்போன்ற மனிதர்களுக்கு எவ்வளவு விசேஷம் பொருந்தியது என்று சொல்லவும் வேண்டுமா?

சூரியனும் சந்திரனும் வான விளக்குகள். தாம் விளங்குவதோடல்லாமல் தம்மைச் சுற்றியுள்ள அகண்ட ஆகாயத்தையும் தம் கிரணங்கள் பட்ட பொருள்களையும் துலக்க வைப்பவை. சூரியனும் சந்திரனும் சதா ஓரிடத்திலேயே இருக்க முடியுமா? அத்தகைய உபகாரிகளுக்கு இன்னும் பல இடங்களில் ஜோலி இருக்கலாமல்லவா? ஆகவே, இயற்கை ஒளி இல்லாத காலத்தில் உபயோகப்படுவதற்காக மனிதன் தன் சிற்றறிவுக்கேற்றபடி தன் கைப்பட விளக்கைச் சிருஷ்டித்தான். கடவுள் ஜோதிப் பிழம்பான, ஒளி வடிவான ஆதவனை உண்டாக்கினார் என்றால் கடவுளின் அம்சமான மனிதனால் ஒரு சிறு பொறியை உண்டாக்க முடியாமலா போய்விடும்? சிக்கிமுக்கிக் கல்லை மோதி அவன் உண்டாக்கின முதல் பொறி இன்னும் இவ்வுலகில் அணைந்து விடவில்லை. அன்று தோன்றின விஞ்ஞான அறிவு இன்று உலக முழுதும் வியாபித்துப் பிரகாசிக்கிறது.

அறிவையும், ஞானத்தையும் நாம் தீபத்துக்கு ஒப்பிட்டுப் பேசுகிறோம். அந்தகாரத்தினின்றும் நமக்கு விடுதலை தருவது விளக்கு. அதேபோல் அஞ்ஞானத்துக்கு விடுதலை அளிப்பதும் அறிவு. 'அறிவுச் சுடர்', 'ஞான தீபம்' போன்ற சொற்றொடர்கள் இதை நமக்கு வலியுறுத்துகின்றன. விளக்குள்ள இடத்தில் நிழல் நீங்காமல் இருப்பதுபோல் அறிவுள்ளவனுக்கு ஏதாவது சந்தேகம் இருந்துகொண்டேயிருக்கும். சந்தேகம் உள்ள இடத்தில் ஞானம் இருப்பது நிச்சயம், புகை சூழ்ந்த இடத்தில் நெருப்பைக் காண்பது நிச்சயம் போல!

ஆதிமனிதன் எண்ணெய் இட்டு, திரி போட்டு அகல் விளக்கைத் தன் நன்றியறிவின் சின்னமாக ஆண்டவன் சந்நிதி முன் ஏற்றினான். அதன் முன் அடி பணிந்து அந்த ஜட விளக்கையும், அதன்மூலம் சுயம்பிரகாசமாய் விளங்கும் ஞான விளக்கையும் சேர்த்து வணங்கினான். பக்தமணிகள் தங்களுடைய மனங்களில் நிர்மாணித்துக் கொண்ட ஆலயங்களில் மானஸீக பூஜை நடத்தினார்கள். "அன்பே தகளியாய் ஆர்வமே நெய்யாக" அவர்கள் விளக்கேற்றி ஜோதிச் சுடரை வாழ்த்தி வணங்கினார்கள்.

நாம் விளக்கேற்றுவதன் லட்சியம் அதன் ஒளியைப் பல்லோரும் பார்த்துப் பயன் பெற வேண்டும் என்பதுதான். மணி விளக்கை ஏற்றி மாடத்தில் வைப்பார்களே அன்றி, கோல விளக்கை ஏற்றிக் குடத்தினுள் வைப்பார் கிடையாது. மாட மாளிகைகளின் மேலும், கூட கோபுரங்களின் மேலும், உயர்ந்த கம்பங்களின் மேலும்

விளக்கேற்றுவோர் அதன் ஒளி உலகெங்கும் பரவி உதவ வேண்டுமென்றே விரும்புகிறார்கள். கோவில் கோபுரங்களில் விளக்கைப் போட்டு பக்த கோடிகளை 'வா'வென்று அழைக்கிறார்கள்; கலங்கரை விளக்கத்தில் விளக்கைக் கொளுத்திக் கரையை விட்டுப் போகும் கப்பல்களை 'ஜாக்கிரதையாகப் போய் வாருங்கள்!' என்று அன்புடன் வழி அனுப்புகிறார்கள். இருப்புப் பாதைகளின் ஓரத்தில் உள்ள கைகாட்டிக் கம்பத்தின் உச்சியில் சிவப்பு விளக்கைப் போட்டு, 'அபாயம், சற்று நில்!' என்று எச்சரித்து கனவேகமாய் வரும் ரயில் வண்டியை நிறுத்துகிறார்கள்.

குன்றின்மேலிட்ட தீபம் எல்லோரும் பார்த்துத் தொழுவதற்கானது. குன்றுகள் தோறும் முருகன் கோவிலைக் கட்டி, விளக்கேற்றி அக் குறிஞ்சிச் செல்வனின் பெருமையைக் குன்றின் மேலிட்ட தீபம் போல் விளக்கச் செய்தவர்கள் நம் தமிழ் நாட்டவர்கள்தான்.

கண் இல்லாமல் வெகு காலம் கஷ்டப்பட்ட ஒருவனுக்குக் கண் கிடைத்ததே போல், பல வருஷங்கள் குழந்தை இல்லாமல் இருந்த ஒருவனுக்கு ஒரு மகன் பிறந்தால், அந்தக் குழந்தை அவனுடைய குல விளக்கு. குல விளக்கு உதித்த வைபவத்தை அவன் கோவில்களில் சரவிளக்கு போட்டுக் கொண்டாடுகிறான்.

பூஜை அறையில் குத்துவிளக்கேற்றி அதற்குக் குங்குமம் இட்டுப் பூ சுற்றித் தொழுகிறோம். பஜனைகளில் குத்து விளக்கை ஏற்றி நடுவில் வைத்து நாமாவளிகள் பாடிக் கொண்டே அதைச் சுற்றி வருகிறோம். ஆனந்தப் பரவச நிலையில் அந்த விளக்கைக் கையில் ஏந்திக் கொண்டு நடனமாடவும் செய்கிறோம். கும்மிப்பாட்டு இலக்கியம், குத்து விளக்கும் அதைச் சுற்றிக் கும்மி அடிக்கும் பெண்களும் இல்லாவிட்டால் எப்படி உருவாகி இருக்க முடியும்?



நற் சகுனங்களில் நம்பிக்கை உள்ளவர்கள் தெய்வ சன்னிதானத்தில் வைக்கப் பட்டுள்ள குத்து விளக்கினின்றும் ஒரு பொறி சிதறினால், அதைத் தங்கள் முயற்சிக்குக் கடவுளின் சம்மதம் கிடைத்து விட்டதாகப் பாவிக்கிறார்கள். சர்வாலங்கார பூஷிதையாக லக்ஷ்மிபோல் தங்கள் வீட்டுக்கு வந்த மருமகளை, 'மருமகள் லக்ஷணமாய்க் குத்து விளக்குபோல் இருக்கிறாள்!' என்று மனம் மகிழ்ந்து பெருமையாய்ச் சொல்லிக் கொள்கிறார்கள்.

விளக்கு திடீரென்று அணைந்துபோவதை அபசகுனமாய்க் கருதுகிறோம். சாதாரணமாய்ப் பேசிக் கொண்டிருக்கும்போது திடீரென்று விளக்கை அணைத்தால் பலருக்குக் கோபத் தீ சுடர் விடும். முதன் முதலாகச் சாயந்திரம் விளக்கை ஏற்றும் போது—அது அரிக்கேன் விளக்கானாலும் சரி, மின்சார விளக்கானாலும் சரி, ஒரே தடவையில் யாதொரு தடங்கலும் இன்றி ஏற்றப்பட வேண்டும் என்று நம்புகிறவர்கள் நம்மில் பலர் இருக்கிறார்கள். விளக்கு எரிவதைப் பார்த்தவுடன் கன்னத்தில் அடித்துக் கொள்கிறவர்களையும் நாம் பார்க்கிறோம்.

சினிமாக் காட்சிகளில் ஒரு 'நோயாளி'யின் படுக்கைக்குப் பக்கத்தில் ஒரு விளக்கை வைத்திருந்தார்களானால், அந்த 'நோயாளி' அந்தக் காட்சியில் 'உயிரை விட்டுவிடப் போகிறான்' என்பதை நீங்கள் நிச்சயப்படுத்திக் கொள்ளலாம். இரண்டு மூன்று முறை அவன் இருமுவான். அதே சமயம் அந்த விளக்கு 'படக் படக்'கென்று இரண்டு மூன்று தரம் அடித்துக் கொள்ளும். பிறகு 'பட்'டென்று அணைந்துவிடும். 'நோயாளி இறந்துவிட்டான்' என்று நீங்கள் ஊகித்துக் கொள்ள வேண்டும்!

ஆனால் வாழ்க்கையில் எத்தனையோ சந்தர்ப்பங்களில் நோயாளியின் பக்கத்திலுள்ள விளக்கு அணையாமலிருக்க, அவன் உயிர் விளக்கு மாத்திரம் அவிந்துபோய் விடுகிறது. அல்லது, விளக்கு அவிந்து போன பிறகுகூட நோயாளி கொட்டாப் புளி மாதிரி உடம்பு தேறி எழுந்திருக்கிறான். இந்தக் காரணத்தைக் காட்டி சினிமா வாழ்க்கையைத் தத்ரூபமாகச் சித்திரிக்கவில்லை என்று யாரும் அதைப் பழிக்க மாட்டார்களென நினைக்கிறேன்.

நான் ஒரு ஸ்டுடியோவுக்குப் படம் பிடிப்பதைப் பார்க்கப் போயிருந்தேன். சுமார் மூன்று மணி நேரம் விளக்குகளை மாற்றி மாற்றிப் போட்டு அணைப்பதி

லேயே காலம் கழித்தார்கள் டைரெக்டரும் காமிரா மேனும். கடைசியில் டைரெக்டர், 'டேய்! பேபியைக் கொண்டா!' என்றார். நான் 'சரிதான், யாரோ ஒரு பேபியை காட்டியும் ஆட அழைத்துக் கொண்டு வா என்றுதான் சொல்லுகிறாராக்கும்!' என்று சதங்கைச் சத்தத்தைக் கேட்கக் காதைத் நீட்டிக் கொண்டிருந்தேன். யாரும் வரக்காணோம். அதற்குப் பதிலாக பேபியை அழைத்துக் கொண்டு வரப்போனவன் ஒரு விளக்கைக் கொண்டு வந்து வைத்தான். பிறகுதான் 'பேபி' என்பது ஒரு விளக்கின் பெயர் என்பதைத் தெரிந்து கொண்டேன்!

மின்சார விளக்குகள் கண்டுபிடிக்கப் படுவதற்கு முன், உலகம் அநேகமாக இரவு நேரங்களில் அந்தகாரத்தில்தான் ஆழ்ந்திருந்தது. ஆனால் அப்பொழுதெல்லாம் அறிவுச் சுடர் வீசும் அறிஞர்கள் பலர் நிறைந்திருந்தார்கள். இப்பொழுதெல்லாம் உலகத்தில் புற இருள் குறைந்து விட்டது. அக இருள் மனிதர்களிடையே அதிகமாகப் பரவி விட்டது. வீட்டில் படிப்பதற்கு விளக்கில்லாமல் தெரு லாந்தர் கம்பத்தின் அடியில் நின்று, அதன் மங்கிய ஒளியில் படித்துப் பரீட்சைகளில் முதன்மையாகத் தேறி, நீதிபதி பதவியை அலங்கரித்தார் ஸர். டி. முத்துஸ்வாமி அய்யர். ஆனால் அறையில் இரண்டு மின்சார விளக்குகளும், மேஜையின் மேல் குத்துவிளக்கைப் போல் ஒரு மேஜை விளக்கும் ஆக மொத்தம் மூன்று விளக்குகள் ஏக காலத்தில் சுடர் விடும் பிரகாசத்தில் படிக்கும் நம் மாணவர்களுக்கு அறிவு மாத்திரம் ஒரே சூன்யமாய், அந்தகாரமாய் இருப்பது ஏனோ?

மனம் கலங்கி, அறிவும் உணர்வும் சோரும் ஒருவனது நிலையை நாம், 'காற்றினில் கலங்கும் தீபம்போல் நிச்சயம் அற்றிருக்கிறது அவன் நிலை!' என்கிறோம். காதலனுடைய பிரிவாற்றாது உடல் சுருங்கி, உயிர் ஒடுங்கிப் படுத்த படுக்கையாய் இருக்கும் காதலியின் நிலையைத் தூண்டிற் புழுவினுடையவும் சுடர் விளக்கினுடையவும் துடிப்புக்கு ஒப்பிட்டார் கவிஞர்.

மாலை வேளையைக் குறிக்கும்பொழுது அதை நாம் 'விளக்கு வைக்கும் நேரம்' என்றுதான் சொல்லுகிறோம். செங்கதிர்ச் செல்வன் மலைவாயில் விழுந்தவுடன், அவன் தனக்குப் பின் விட்டுச் சென்ற வாரிசுகள் போல் இல்லம் தோறும் 'சூரியன் குஞ்சுகள்' என அழைக்கத் தக்க சின்னஞ் சிறு விளக்குகள் ஏற்றப்படுகின்றன.

அழகுக்கு அழகு செய்வதே போல் விளக்குக்கும் நாம் அடிக்கடி விளக்கம் தர வேண்டுவது அவசியம். சுடர் விளக்காயினும் தூண்டுகோல் இருக்க வேண்டும், இயற்கையிலேயே கலைஞனுக்கு ரசிகர்களுடைய உற்சாக மொழிகள் வேண்டுவது அவசியம் போல.

இந்த வருஷம் ஆகஸ்ட் மாதத்தில் நம்மை ஆண்டு வந்த ஏகாதிபத்திய அரக்கனிடமிருந்து விடுதலை பெற்றோம். இந்தச் சரித்திரப் பிரசித்தி பெறப்போகிற நாளையும் நாம் மாளிகை தோறும் மணி விளக்கேற்றியும், குடிசைகள் தோறும் குத்து விளக்கேற்றியும், ஆலயங்கள் தோறும் அகல் விளக்கேற்றியும் கோலாகலமாகக் கொண்டாடினோம்.

நாம் அரிதிற் பெற்ற இந்தச் சுதந்திரச் சுடர் மேன் மேலும் ஒளி வீசி, உலகுக்கெல்லாம் வழி காட்டியாய்த் திகழ வேண்டுமென்று, சுந்தர விளக்கனைய நாயகனும், ஆதிபரஞ் சுடருமான இறைவனைப் பிரார்த்திப்போமாக!

## மன்னிப்பு உண்டு; ஆனால் .....!

இத்தாலியர் அபிஸீனியாவின்மீது படை யெடுத்தபோது, அதன் மன்னர் பின்வருமாறு ஒரு உத்தரவைப் பிரகடனம் செய்தார்:—

இந்த உத்தரவைப் படிக்கும் நம் நாட்டு மக்களில், ஈட்டியைத் தூக்கிச் செல்லும் அளவுக்குப் பலமுள்ள ஒவ்வொருவரும் தலைநகரான அடிஸ் அபாபாவுக்குச் செல்ல வேண்டும். விவாகமான ஒவ்வொருவரும் தன் மனைவியைச் சமையல் வேலை முதலியவைகளைக் கவனிப்பதற்கு அழைத்துச் செல்ல வேண்டும். விவாகமாகாதவர்கள் சமையல் வேலைக்கு வேறு யாரையாவது அழைத்துச் செல்லலாம். தாய்மார்கள், குருடர்கள், வயதானவர்கள், ஆயுதந் தூக்க வலுவில்லாதவர்கள் ஆகியவர்களுக்கு மன்னிப்பு உண்டு.

ஆனால், இந்த உத்தரவைப் பார்த்த பின்பும் வீட்டில் இருப்பவர்கள் தயவு தாட்சண்யமின்றித் தூக்கிலிடப்படுவார்கள்!




GOLDEN

# Platignum

MADE IN ENGLAND.

## கோல்டன் பிளாட்டினம்.

இங்கிலாந்தில் செய்யப்பட்டது.

அப்படியில்லை . . . கோல்டன் பிளாட்டினம் பேனா முன் இருந்த விலையான ரூ. 3-1-0 க்கே கிடைக்கிறது. சரக்குக் குறைவு ஏற்பட்டிருந்தாலும், விலைவாசிகள் அதிகமாயிருந்தபோதிலும் கோல்டன் பிளாட்டினம் பேனாவின் இலக்ஷணம் எப்பொழுதும் போல உயர்வுள்ளதாகவே இருக்கிறது.

ஒவ்வொரு உண்மையான பிளாட்டினம் பேனா குழலின்மேலும் நிப்பின் மேலும் பேனாவின்பெயர் செதுக்கப்பட்டிருக்கிறது—"பிளாட்டினம்" என்ற பெயர் இருக்கிறதா என்று பாருங்கள். போலிகளை வாங்காதீர்கள்

வர்த்தக விசாரணைகளுக்கு ஏகவிலை வியாபார உரிமையாளர்கள்:

முல்லர் அன்ட் பிப்ஸ் (இந்தியா) லிமிடெட்

15, கங்குராம செட்டித் தெரு, மதராஸ்

## சிறந்த போட்டோக்களுக்கு




**Be Smart-use Gevaert**

போட்டோவைத் தொழிலாகக் கொண்டவர்களுக்கும் சரி, பொழுது போக்காகக் கொண்டவர்களுக்கும் சரி, உங்கள் காமிராவிற்கு மிகப் பொருத்தமான அதிவேகம் பொருந்திய பிலிம் இதோ இருக்கிறது—வீட்டினுள் எடுப்பதற்கும் வெளிப்புறக் காட்சிகளுக்கும் உகந்தது. கெவார்ட்ஸ் பான்க்ரோமோஸாவின் வர்ண பேத சக்தி ஓர் பிரத்யேக அம்சம்.

**உங்களூர் போட்டோ சாமான் விற்பனையாளரிடம் பாருங்கள்**




இந்தியாவில் மொத்த விற்பனையாளர்கள்

அல்லைட் போட்டோகிராபிக்ஸ் லிமிடெட்

பம்பாய் - கல்கத்தா - மதராஸ்

# வட்ட மேஜை

தியாகராய நகர்
12—11—47

கல்கி ஆசிரியர் அவர்களுக்கு.

உங்கள் நவம்பர் 2-ம் தேதி கல்கி தலையங்கத்தில் 'விசித்திரப் பஞ்சம்' என்ற பகுதியைப் படித்தேன். "வியாபாரிகளிடமும் ஏராளமாகக் காப்பிக் கொட்டை 'ஸ்டாக்' இருப்பதாக இந்திய காப்பி போர்டார் கூறுகின்றனர்" என்று எழுதியிருக்கிறீர்கள். அப்படி அது உண்மையாக இருக்குமாயின், காப்பி மார்க்கெட்டிங் ஆபீஸர் ஏன் அவ் வியாபாரிகளைக் கடையைத் திறந்து வைக்கச் சொல்லிக் கட்டாயப்படுத்தவில்லை? அவருக்கு லைசென்ஸ் வியாபாரிகளின் புத்தகங்களைக் கூடப் பரிசீலனை செய்ய அதிகாரமிருக்கிறதே! தாங்கள் தயவு செய்து ஹிந்து பத்திரிகை அக்டோபர் 17-ம் தேதியன்று 'ஸிவில் ஸப்ளைஸ் ஆபீ'ஸால் வெளியிடப்பட்டுள்ள செய்தியைச் சற்றுக் கவனிக்கக் கோருகிறேன். அதில் மதராஸுக்கு மாதம் 150 டன் காப்பிக் கொட்டை வேண்டுமென்று அறிவிக்கப்பட்டிருக்கிறது. அதே ஹிந்து பத்திரிகையில் அக்டோபர் 31-ம் தேதி "மாகாண உணவு நிலை" (Food Position in the Province) என்ற தலைப்பின் கீழ் மதராஸுக்குச் செப்டம்பர் மாதம் 67 டன்கள் காப்பிக் கொட்டை கொடுக்கப்பட்டது என்று சொல்லப்பட்டிருக்கிறது. சென்னைக்குத் தேவையான காப்பிக் கொட்டை மூன்று மாதங்களாகவே சரியாகக் கொடுக்கப்படாததால்தான் இந்தக் க்யூகளும் கால் கடுப்பும். அது உடனே நிவர்த்திக்கப்படுமானால் காப்பி கஷ்டமும் தீரும்.

"காப்பிப் பிரியன்."

செய்துங்கநல்லூர்,
21—10—47.

அன்புமிக்க ஆசிரியர் கல்கி அவர்களுக்கு.

'நெல் விலையை உயர்த்து; விவசாய விலை கட்டவில்லை' என்கிறார்கள் நெல் உற்பத்தியாளர்கள். 'போனஸ் கொடுத்து சர்க்கார் பொக்கிஷம் காலியாகி விட்டது; விலை உயர்த்த முடியாது' என்கிறது சர்க்கார். 'நெல் விலையை உயர்த்தாதே; வாங்கிச் சாப்பிடக் கட்டுபடியாகாது' என்கிறார்கள் நெல்லுக் காய்ச்சி மரம் என்பவர்கள். எல்லோருமே பொறுமையைக் கடைப்பிடிக்க நெல் உற்பத்தியாளருக்கு உபதேசம் விடுக்கிறார்கள். பிரச்னை தீருமா?

படி நெய் 1 ரூபாய்க்கு விற்ற கிராமத்திலே படி 10 ரூபாய்க்கு விற்கிறது. பால் விலை எட்டு மடங்கு உயர்ந்திருக்கிறது. கீரை விற்பவன் 'ஒரு அணாவுக்குத்தான் கீரை விற்க முடியும்; அதற்குக் குறைந்து கிடையாது' என்கிறான். முன்னும் ஒரு பிடி அரிசிக்கும் போட்டுக் கொண்டிருந்தவன். 4 முழ வேஷ்டி 7 அணாவுக்குச் சந்தையில் வாங்கியது. இப்பொழுது 2-12-0. இப்படி வாழ்க்கைக்கு அவசியமான எல்லாச் சாமான்களுமே எட்டு மடங்கு 10 மடங்கு விற்று வருகின்றன. சிறிய மிராசுதார்கள் 4, 5 ஏக்கர் வைத்துக் கொண்டு 10, 12 நபர்களுடன் குடும்பம் நடத்துபவர்கள் என்ன செய்வார்கள்? அது போகட்டும். சாதாரணமாக ஒரு வயலைக் குத்தகைக்கு அடைந்தால் அது (50 செண்டு என்று வைத்துக் கொள்ளுங்கள்) வருஷக் குத்தகை ஆறு கோட்டையிலிருந்து எட்டுக் கோட்டை வரை கொடுப்பான். ஒரு சில நிலத்தில் 5 கோட்டைதான் கிடைக்கும். அதற்குச் செலவு சாதாரணமாக உரம் 10 ரூபாயும் உழவுக் கூலி 10 ரூபாயும் போக நடுகை, களை பறி, வரப்பு, தறி போன்றவைகள் வேறு இருக்கின்றன. பயிரிடுகிற விவசாயியின் பாடு என்ன? அதே 50 செண்டில் வருடத்தில் சாதாரணமாகப் பதின்மூன்று கோட்டை நெல் விளைய வைக்கலாம். ஆனால் செலவு என்ன தெரியுமா? 160 ரூபாய் ஆகிறது. விவரம் கொடுக்கிறேன்.

இரு பூவுக்கும் ஏர் 30-0-0, புண்ணாக்கு மூட்டை 4-க்கு 40-0-0, நடுகைச் சம்பளம் 10-0-0, உரம் 14 வண்டிக்கு 42-0-0, களை பறி, வரப்பு தறி 10-0-0, விதை 5-4-0, போர் நெல் 15-12-0, சில்லறைச் செலவு 7-0-0 ஆக ரூ. 160. இது ஓரளவு கிராமத்தில் செல்வாக்கு இருந்து பெரிய அளவில் பண்ணை நடத்தினால்தான் முடியும். அதல்லாமல் தனியாக 50 செண்டு என்று வைத்தால் இதைவிட அதிகமாகும். பாருங்கள், லாப நஷ்டத்தை! குத்தகைக்கு விவசாயியிடத்தில் அடைந்தால் 6 கோட்டையிலிருந்து எட்டுக் கோட்டை வரை கிடைக்கும். சொந்த விவசாயம் செய்தால் செலவு போக 5 கோட்டை வரும். எவன் ஜாஸ்தி உற்பத்தியைப் பெருக்க வருவான்? பேப்பரில் எழுதி விட்டால் வந்து விடுமா? அது சரி, விவசாயி எப்படிக் குத்தகைக்கு ஏற்றுக் கொள்கிறான் என்பீர்கள். விவசாயி நான் சொன்ன அளவில் உரம் போடுவதில்லை. வயலும் சரியானபடி விளைவு காண்பதில்லை. குத்தகைக்கு ஏற்றுக் கொண்டு விட்டாலும் விவசாயி அந்த நெல்லை இப்பொழுது அளந்து விடுவதில்லை. பாக்கி என்றும் தள்ளுபடி என்றும் சொல்லி நாமம்தான் போடுகிறான். அதனால்தான் நாட்டில் உற்பத்திக் குறைவு. விலையைக் கூட்டினால் பின் வாழ்க்கைத் தரங்களெல்லாம் கூடிவிடுமே என்று கேட்கிறார்கள். கூடாமல் செய்ய வழி இருக்கிறது. ஆனால் அதை யாரும் கவனிக்கப் போவதில்லை. இருப்பினும் எழுதுகிறேன். உற்பத்தியைப் பெருக்கும் சொந்த விவசாயதார்களுக்கு சர்க்காரிலிருந்து நஷ்ட ஈடு கொடுக்க வேண்டும்.

உதாரணமாக என்னிடம் 15 ஏக்கர் இருக்கிறது. 45 கோட்டை கண்டு முதல். செலவு போக சர்க்காருக்கு 30 கோட்டை. 25 கோட்டை அளந்திருப்பேன். ஏக்கருக்கு 6 கோட்டை விளைய வைத்தால் சர்க்கார் ஏக்கருக்கு 25 ரூபா, 50 ரூபா என்று நஷ்ட ஈடு தரவேண்டும். இப்படி உற்பத்தி கூடக் கூட நஷ்ட ஈடு தொகையும் கூட்டியே தர வேண்டும். இதற்கு வருவாயை சர்க்கார் வேறு விதமாகத் தேடிக்கொள்ள வேண்டும்.

இது நடக்கச் செய்வதை விட்டு, நெல் கொள் முதல் அதிகம் வேணும், தியாக புத்தி வேணும் என்றால் எப்படி முடியும்? சட்டியிலிருந்தால்தானே அகப்பையில் வரும்?

வெங்கடாச்சாரி.

# அவள் என்னவானாள்?

☆ விந்தன் ☆

ஏனோ தெரியவில்லை; கடந்த மூன்று மாத காலமாகக் கணத்துக்குக் கணம், “அவள் என்னவானாள், அவள் என்னவானாள்?” என்ற கேள்வி என் உள்ளத்தில் எழுந்த வண்ணம் இருக்கிறது.

என்ன காரணத்தினாலோ அவளிடம் என் உள்ளத்தைப் பறி கொடுத்து விட்டேன், உண்ணாமல் உண்ணும்போதும், உறங்காமல் உறங்கும்போதும், தொழில் செய்யாமல் செய்யும்போதும்கூட அந்தக் கேள்வியை மீண்டும் மீண்டும் கேட்டுக் கொள்கிறேன் — பதில்தான் இல்லை!

இத்தனைக்கும் அவள் தன் கடைசிக் கடிதத்தில் — வெறும் கடிதத்தில் அல்ல; காதல் கடிதத்தில்தான் — அழுத்தந் திருத்தமாக எழுதியிருக்கிறாள்:

“... நான் கடிதம் எழுதக்கூடிய ஒரு நிலையிலிருந்து, மனமுமிருந்து, சந்தர்ப்பமும் வாய்த்தால் எழுதுவேன். அதுவரை என்னையோ, என் கடிதத்தையோ எதிர்பார்த்து எதிர்பார்த்து நீங்கள் ஏமாற்றமடைய வேண்டாம்; நானும் தங்கள் கடிதத்தை எதிர்பார்க்கவில்லை...!”

ஆம், மலரை யொத்த மனம் படைத்த ஒரு மாதரசி, தன் மலர்க் கரத்தால் காதல் நிறைந்த கருணையுடன் அடியேனுக்கு எழுதிய வரிகள்தான் இவை!

இத்துடன் அவள் நிற்கவில்லை; போனாற் போகிறதென்று பின்வருமாறும் எழுதியிருக்கிறாள்:

“நீங்கள் தைரியமாக இருக்க வேண்டும்; தினசரி வேலைகளில் உற்சாகத்துடன் ஈடுபட வேண்டும்!”

எப்படியிருக்கிறது, கதை? முதல் வரியைப் படித்ததுமே நான் இறக்காமல் இறந்துவிட்டேன். அதற்குப் பிறகுதான் அந்தக் காதலி தன் காதலனுக்குச் சொல்கிறாள்: அவன் தைரியமாக இருக்க வேண்டுமாம்; உற்சாகத்துடன் தன்னுடைய வேலைகளில் ஈடுபட வேண்டுமாம்!

அட, ஈஸ்வரா!

* * *

“பாலைவனம் போன்ற என் வாழ்க்கையில் தங்கள் கடிதங்கள்தான் பசும்புற்றரைகளாகக் காட்சி அளிக்கின்றன!” என்று அன்று எழுதியவளா இன்று இப்படி எழுதினாள்?

“தங்கள் கடிதத்தைக் கொண்டு வரும் தபாற்காரன் ஒரு நாளாவது என்னைத் தேடி வருவதில்லை; நானேதான் அவனைத் தேடிக் கொண்டு போகிறேன்!” என்று அன்று எழுதியவளா இன்று இப்படி எழுதினாள்?

“எதையும் காலத்தோடு செய்வதுதான் நல்லது; காலந் தாழ்த்து செய்வது நல்லதல்ல. முடிந்தால் உடனே கல்யாணத்துக்கு ஏற்பாடு செய்யுங்கள்; இல்லையெனில் நாம் இருவரும் எங்காவது ஓடிப் போவோம்!” என்று அன்று எழுதியவளா இன்று இப்படி எழுதினாள்?

“உணர்விழந்தேன்; உற்சாகமிழந்தேன்; உங்கள் நினைவால் உணவு செல்லாமலும் உறக்கம் கொள்ளாமலும் தவியாய்த் தவிக்கிறேன்!” என்று அன்று எழுதியவளா இன்று இப்படி எழுதினாள்?

“ஒன்று, நீங்கள் வேண்டும்; நீங்கள் தான் வேண்டும். இல்லை, காலன் வேண்டும்; காலன்தான் வேண்டும்!” என்று அன்று எழுதியவளா இன்று இப்படி எழுதினாள்?

என்னால் நம்பவே முடியவில்லையே!

* * *

“நான் கடிதம் எழுதக்கூடிய ஒரு நிலையிலிருந்து, மனமுமிருந்து, சந்தர்ப்பமும் வாய்த்தால், எழுதுவேன்......” என்றால் என்ன அர்த்தம்?

“இல்லையென்றால் எழுதமாட்டேன்!” என்றுதானே அர்த்தம்?

“நான் கடிதம் எழுதக்கூடிய ஒரு நிலையிலிருந்து......”

இதென்ன வார்த்தை? கடிதம் எழுதக்கூடிய நிலையில் இல்லாமல் வேறு எந்த நிலையில் இருப்பாளாம்?

ஒரு வேளை வேறு யாரையாவது கல்யாணம் செய்து கொள்ளும் நிலையில் இருந்தாலும் இருப்பாளோ?



அப்படி நினைப்பதற்கும் அவள் இடம் கொடுத்திருக்க வில்லையே!

ஒரு சமயம் அவள் ஒரு வார காலமோ இரண்டு வார காலமோ, எதோ ஓர் ஊருக்குப் போய்த் தங்கியிருக்க வேண்டிய அவசியம் சேர்ந்தபோது, எனக்கு என்ன எழுதியிருந்தாள், தெரியுமா? "உங்களை விட்டுவிட்டு வேறு யாரையாவது கல்யாணம் செய்து கொண்டுவிட ஓடுகிறேனோ என்று நீங்கள் தயவு செய்து நினைத்துவிட வேண்டாம்!" என்றல்லவா எழுதி யிருந்தாள்?

இதுதான் போகட்டும். அவள் மனத்துக்கு என்ன வந்தது? அது இல்லாமலிருப்பதற்கு எவ்வித நியாயமும் இல்லையே! ஏனெனில், அந்தப் பாழும் மனம் எப்பொழுதும் என்னிடமே இருக்கிறதென்று அவளே எழுதி யிருந்தாளே! — ஒருவேளை அதனாலேயே தன் மனம் இன்னும் தன்னை வந்து அடையவில்லை என்று அவள் எழுதி யிருப்பாளோ?

கடைசியில், சந்தர்ப்பம் வாய்க்க வேண்டுமாம் சந்தர்ப்பம்! எந்தக் காதலர்களாவது எந்தச் சந்தர்ப்பத்தையாவது எதிர்பார்த்துக் கொண்டு எங்கேயாவது காத்திருப்பதுண்டோ?— அழகுதான்!

***

முதலிலேயே நான் அவள் மீது சந்தேகம் கொண்டதுண்டு. ஏன் தெரியுமா? அவளை நான் காதலிப்பதற்கு எத்தனையோ காரணங்கள் இருந்தன. முக்கியமாக, அவள் பெரும்பாலான பெண்களைப் போல் என் உடலை மட்டும் வளர்க்கக் கூடியவளா யில்லை; உணர்ச்சியையும் வளர்க்கக் கூடியவளா யிருந்தாள்.

ஆனால், என்னை அவள் காதலிப்பதற்கு எந்தவிதமான காரணமும் இருக்கவில்லை; ஆம், இருக்கவே யில்லை.

என்னிடம் அழகும் இல்லை; ஐசுவரியமும் இல்லை. பேரும் இல்லை; புகழும் இல்லை!

"இவையெல்லாம் இல்லாத காதல் என்ன காதல்?" என்று ஒரு நாள் அவளைக் கேட்டேன்.

அவள் சொன்னாள், "அதுதான் நிஜக் காதல்!" என்று.

எனக்கு ஆச்சரியமா யிருந்தது. "இது நிஜமா?" என்றேன்.

"நிஜம்தான்!" என்றாள்.

பின் அந்தக் காதலுக்கு இன்று ஏன் இந்த கதி?

இந்த விஷயத்தில், அவள் உலக வழக்கத்தை யொட்டித் தன் பெற்றோரின் மீது பழியைச் சுமத்திவிட்டுத் தான் தப்பித்துக் கொள்ளவும் முடியாது. ஏனெனில், அவளே தன் வீட்டுக்குச் சர்வாதிகாரி!

***

அடாடா! கடந்த காலத்தைப் பற்றி இப்பொழுது கொஞ்சம் எண்ணிப் பார்த்தால் எல்லாம் ஒரே வேடிக்கையா யிருக்கிறது. ஏன், விநோதமாய்க்கூட இருக்கிறது!

இதெல்லாம் வெளியே சொல்லக் கூடாதவை, பரம ரகசியமாக வைத்துக் கொள்ள வேண்டியவை யென்றாலும், இங்கே சொல்லத்தான் வேண்டி யிருக்கிறது. "மனைவி கிழித்த கோட்டைத் தாண்டாமலிருப்பது கணவனின் கடமை!" என்பது இப்போதெல்லாம் எங்கும் வழக்கமா யிருந்து வருகிறதல்லவா? ஆனால், இந்த வழக்கம் எல்லோருடைய விஷயத்திலும் கல்யாணமான பிறகுதான் ஏற்படுகிறது. நான் என்னடா வென்றால், கல்யாணமாகு முன்பே அவள் கிழித்த கோட்டைத் தாண்டுவதில்லை!

இதைப் பார்க்கும்போது, "காதல், பெண்களைப் பலசாலிகளாக்கி விடுகிறது; ஆண்களைப் பலவீனர்களாக்கி விடுகிறது!" என்று யாரோ ஒரு புண்ணியவான் சொல்லி யிருக்கிறானே, அது எவ்வளவு தூரம் உண்மையா யிருக்கிறது!

ஆனாலும் அவன் சொன்னதை உலகம் கேட்டதா? இல்லவே யில்லை. முக்கியமாக, ஆணுலகம் அதை லட்சியம் செய்யவே யில்லை. அது தன் பாட்டுக்குக் காதல் நாடகத்தில் ஈடுபட்டுத் தன்னை எவ்வளவுக் கெவ்வளவு பலவீனப்படுத்திக் கொள்ள முடியுமோ, அவ்வளவுக் கவ்வளவு பலவீனப்படுத்திக் கொண்டு பாழாய்ப் போகிறது!

அதற்கேற்றாற்போல்தான் இந்தக் கவிஞர்கள், காவிய கர்த்தாக்கள், கதாசிரியர்கள் அத்தனை பேரும் இருக்கிறார்கள். அவர்கள் ஆண்களால் காதலிக்கப்பட்டுக் கைவிடப்பட்ட பெண்களுக்காகத்தான் கண்ணீர் வடிக்கிறார்களே தவிர, பெண்களால் காதலிக்கப்பட்டுக் கைவிடப்பட்ட ஆண்களுக்காகக் கண்ணீர் வடிப்பதே யில்லை!

ஏன் இந்தப் பாரபட்சமோ?

***

இப்பொழுது நான் என்ன புலம்பி என்ன பயன்? அவளோ என்னை அறவே மறந்து விட்டாள்; நான்தான் அவளை மறக்க முடியாமல் தவித்துக் கொண்டிருக்கிறேன். என்னை ஆதரித்து எழுத இந்தப் பாழ்த உலகில் ஒரு கவிஞன் இல்லை; காவிய கர்த்தா இல்லை; கதாசிரியனும் இல்லவே யில்லை!

இதோ, கதிரவனும் அவளைப்போல் மேல் வானத்தில் மறைந்து விட்டான். நான் கடற்கரையில் உட்கார்ந்து கொண்டிருக்கிறேன். என்னுடைய கண்கள் வழக்கம்போல் பார்க்குமிட மெல்லாம் அவளைத் தேடிக் கொண்டிருக்கின்றன. மனமும், “அவள் என்னவானாள், அவள் என்னவானாள்?” என்று ஜபித்துக் கொண்டே யிருக்கிறது.

வான முகட்டை எட்டிப் பிடிக்கக் கடல் அலைகள் ஓயாமல் ஒழியாமல் முயன்று கொண்டிருக்கின்றன அல்லவா? அவற்றைப்போல் நானும் அவளைத் தேடிப் பிடிக்க முயன்று கொண்டிருக்கிறேன்.

பாவம், அந்த அலைகளுக்கு என்றும் வெற்றி கிட்டப் போவதில்லை என்பது நிச்சயம். என்னுடைய முயற்சியும் அப்படித்தான் முடியுமோ?

பின் ஏன் இந்த விபரீத சந்தேகம் என்றுமில்லாதபடி என் உள்ளத்தில் எழுகிறது?

“ஒரு வேளை அவள் செத்துப்போயிருப்பாளோ?”

இப்படி எண்ணியதுதான் தாமதம்; “இல்லை; அவள் சாகவில்லை.........!” என்கிறது எங்கிருந்தோ வரும் ஒரு குரல்.

திரும்பிப் பார்க்கிறேன். என்ன விந்தை இது! மூன்று மாதங்களுக்குப் பிறகு — இல்லை, மூன்று வருடங்களுக்குப் பிறகு— இல்லை யில்லை, மூன்று யுகங்களுக்குப் பிறகு, அதோ என் கண்ணில் படுகிறாளே, அவள் யார்?

அவள் அவளேதானா? — ஆம், அவள் அவளேதான்!

அவளுடன் செல்பவன் — அவள் சகோதரனாயிருப்பானோ? — இருக்கவே யிருக்காது! — அவ்வளவு லாகவமாக அவள் இடையில் கைகொடுத்து அணைத்துக் கொண்டு செல்லும் அவன், அவள் கணவனைத் தவிர வேறு யாராயிருக்க முடியும்?

“சரி, இனி நம்மைப் பொறுத்தவரையில் அவள் செத்தவளாகத்தான் ஆகிவிட்டாள்!” என்று ஏங்குகிறது என் அப்பாவி மனம்.

மீண்டும் அதே குரல்: “இல்லை; அவள் சாகவே யில்லை!” என்கிறது.

எனக்கு ஆத்திரம் பொத்துக் கொண்டு வருகிறது. “பின் யார் செத்தது? நானா செத்துவிட்டேன்?” என்று கத்துகிறேன்.

“நீயும் சாகவில்லை!” என்று அந்தக் குரல் என்னை விட உச்சஸ்தாயியில் கத்துகிறது.

நான் மிரண்டு போய், “பின் யார்தான் செத்தது?” என்று கேட்கிறேன்.

“காதல் செத்தது!”

“அதற்குச் சாவே யில்லை என்கிறார்களே!”

“உண்மை; கவிதையிலே, காவியத்திலே, கதையிலே அதற்குச் சாவே யில்லைதான்! ஆனால், வாழ்க்கையில் எதற்கும் உள்ளதுபோல் அதற்கும் சாவு உண்டு. சாவு இல்லையென்றால் பிறப்பும் இல்லையல்லவா? பிறப்பதும் இறப்பதும் இல்லையென்றால் ‘காதல்’ என்று ஒன்று இந்த உலகத்தில் இல்லவேயில்லை என்றுதானே சொல்லவேண்டும்? ஆகவே, எல்லாவற்றையும்போல் காதலுக்கும் ஜனனமும் மரணமும் உண்டு!” என்கிறது அந்தக் குரல்!

நீங்கள் அதை மறுக்கிறீர்களா?

CP/156



# ரஸாயன வர்ண விசித்திரங்கள்

பட்டினிலாடையும் பஞ்சில் உடையும் பண்ணி மலைகளென வீதி குவிப்போம்''-இது பாரதியார் வாக்கு.

நவீன ஸ்வதந்திர இந்தியாவின் நவ நவ கோல வேலைப்பாடுகளுடன் வித வித வண்ணங்களில் நூதன ஆடைகள் இனி தயாரிக்கலாம். பண்டைய காலத்தில் கண்டிராத வகையில் ஆடைகளும் அவற்றிற்கு சாயக்கலவைகளும் தயாரிப்பது, ரஸாயனத்தின் உதவியால் இன்று சாத்தியமாகியுள்ளது. ஆடை நூல் உற்பத்தி, சாயத்துவைப்பு, கோலங்கள் அச்சிடல் வேலைகளில் பெருவாரியாக உபயோகப்படுவது ப்ளீச்சிங் பவுடர், காஸ்டிக் ஸோடா, குளோரின் திரவம் இவையே.

மேட்டூர் கெமிகல், இண்டஸ்ட்ரியல் கார்ப்பொரேஷன் லிமிடெட் இப்பொருள்கள் உற்பத்தியில் தலை சிறந்து விளங்குகிறது.






வெளியிடுவோர்:

மேட்டூர் கெமிகல் & இண்டஸ்ட்ரியல் கார்ப்பொரேஷன் லிமிடெட்
மேட்டூர் அணை, சேலம்.

மானேஜிங் ஏஜண்டுகள்:

சேஷசாயி பிரதர்ஸ் லிமிடெட், திருச்சிறாப்பள்ளி

---

பூரண விற்பனை ஏஜெண்டுகள்:—

அலைட் இண்டஸ்ட்ரியல் டிஸ்ட்ரிப்யூட்டர்ஸ் லிமிடெட்

தலைமை ஆபீஸ்: 120, அரண்மனைக்காரத் தெரு, மதராஸ்-1

கிளை ஆபீஸுகள்:

பெஜவாடா, கோயமுத்தூர், கள்ளிக்கோட்டை, கும்பகோணம், மேட்டூர் அணை, சேலம், ஹைதராபாத், திருச்சிறாப்பள்ளி, திருவனந்தபுரம்.

---

# அன்னதானம் அண்ணாசாமி

லல்லு



அன்னதானம் அண்ணாசாமி என் தூரபந்து. 'அன்னதானம்' என்றால் போதும், அந்தக் குடும்பத்தினரைத் தெரியாதவரே தஞ்சாவூர் ஜில்லாவில் இல்லை எனலாம். நிலபுலன்கள் ஏராளமாகப் படைத்த பாரம்பரைப் பணக்காரக் குடும்பம். அன்னதானம் என்பது அந்தக் குடும்பத்தினருக்கு ஐந்து தலைமுறைகளாகவே இருந்து வரும் கௌரவப் பெயர். அவர்கள் மூதாதையரில் ஒருவர் 'இரந்தவர்க்கு இல்லையென்னாமல்' தானம் செய்தவராம்; தம்முடைய சஷ்டியப்த பூர்த்தியின் போது அவர் பல்லாயிரக்கணக்கான ஏழை எளியவர்களுக்கு அன்னதானம் செய்தாராம். இது காரணமாக 'அன்னதானம்' என்ற பட்டம் அந்தக் குடும்பத்துக்கு நிலைத்துவிட்டது.

நான் கண் காணாத காட்டிலிருந்து— வடக்கே யிருந்து — ஒரு மாத ரஜாவில் தமிழ்நாடு வந்து சேர்ந்தேன் — சொந்த மகளைப்போல வளர்த்த என் மைத்துனி விலாஸினிக்கு வரன் தேடும் பொருட்டு. அண்ணாசாமியின் மனைவி தவறிப்போய் இரண்டு வருடங்களாகி விட்டன என்று கேள்விப்பட்டதும் எனக்கு ஒரு யோசனை தோன்றிற்று. அவன் தஞ்சையிலே பெரிய மிராசுதார்; நல்ல படிப்பாளி; வயதும் முப்பதுக்குள்ளாகவே ஆகிறது. விலாஸினியை அவனுக்குக் கொடுத்து விடுவதில் என்ன குறைவு என்று எனக்குத் தோன்றிற்று. எனவே, என் மனைவியின் சம்மதமும் பெற்று அண்ணாசாமியின் ஊருக்குப் பிரயாணமானேன்.

மூன்று நாள் ரயில் பிரயாணத்தினால் களைத்துப்போன நான், அந்த ஊர் ஸ்டேஷனில் இறங்கியதும் ஒரு போர்ட்டரை அழைத்து, 'அன்னதானம்' என்று கேட்க ஆரம்பித்ததுமே, அவன் உடல் வணங்கி, "ஐயாவே அதோ காத்திருக்காரு, சாமி!" என்று சுட்டிக் காண்பித்தான்.

அவன் சுட்டிக் காண்பித்த ஆசாமியைப் பார்த்ததும் எனக்கு ஒரே ஆச்சரியமாகப் போயிற்று—அவ்வளவு எளிய தோற்றமுடைய பணக்காரனை நான் கண்டதேயில்லை. நாலு முழக் கதர் வேஷ்டி, கதர் 'ஜிப்பா', ஒரு கம்பி ஜரிகைகூடப் போடாத ஒரு கதர் அங்கவஸ்திரம்—அவ்வளவுதான்! அவன் முகத்தில் ஜொலித்த தேஜஸ் ஒன்றே அவன் குலப் பெருமையை உணர்த்துவதற்குப் போதும். நான் அவன் அருகே சென்று என்னை அறிமுகப்படுத்திக் கொண்டேன். பரஸ்பரம் க்ஷேம லாபங்களை விசாரித்துக் கொண்ட பின், ஸ்டேஷனிலேயே காப்பி, இட்டிலி சாப்பிட்டோம். சாப்பிட்டானதும் அண்ணாசாமி என்னிடம், "மிஸ்டர் நடேசன்! ஒரு அவசரக் காரியமாக எட்டு மணி வண்டியில் நான் தஞ்சாவூருக்குப் போகிறேன். உங்கள் கடிதம் நேற்றுத்தான் வந்ததால் பிரயாணத்தை ஒத்திப் போட முடியவில்லை. என் வண்டி காத்திருக்கிறது; நீங்கள் வீட்டுக்குப் போய் ஸ்நானம் செய்துவிட்டுக் கொஞ்சம் ஓய்வு எடுத்துக் கொள்ளுங்கள். சங்கரய்யர் ஓட்டலிலிருந்து உங்களுக்குச் சாப்பாடு வரும். ராத்திரி சாப்பாட்டுக்குள் நான் திரும்பி விடுவேன்!" என்று சொல்லி விடை பெற்றுக் கொண்டான்.

அண்ணாசாமி பழைய வீட்டைப் புதுப்பித்து நாகரிக வசதிகளுடன் அரண்மனை போல் கட்டியிருந்தான். ஸ்னானம் செய்தானதும் காலை வீதி நடந்து வர ஆசையுண்டாகவே, ஊரைச் சுற்றிப் பார்க்கக் கிளம்பினேன். சிறிது தூரம் சென்றதும், "ஸார், ஸார்!" என்று யாரோ என்னை அழைப்பது கேட்டுத் திரும்பிப் பார்த்தேன். என்னை நோக்கி ஒருவர் அவசர அவசரமாக வந்து கொண்டிருந்தார். ஐம்பது வயது மதிக்கத் தகுந்த அவர், பஞ்சகச்சமும் சட்டையும், உச்சிக் குடுமியும் மூக்குக் கண்ணாடியுமாய் அணிந்த காட்சி மிகவும் வேடிக்கையாக இருந்தது. என் அருகில் வந்ததும், "அன்ன தானத்தின் வீட்டுக்கு வந்திருக்காப் போல இருக்கு!" என்று நீட்டினார் அவர்.

நான் 'ஆமாம்' என்பதற்கு அறிகுறியாகத் தலையை அசைத்தேன்.

அவர் தொடர்ந்து, "உறவோ?" என்றார்.

"தூர பந்து" என்றேன், சுருக்கமாக.

"எந்த ஊர்?"— இது அடுத்த கேள்வி.



"ஆமதாபாத்" என்று பதில் சொன்னதும், அவர் 'ஆ' வென வாயைப் பிளந்தார். அப்புறம் கேள்விமேல் கேள்வியாகப் போட்டுக் கால் மணி நேரத்துக்குள் அந்த முன்பின் தெரியாத ஆசாமி, என்னுடைய பெயர், குலம் கோத்திரம், குழந்தை குட்டி, வரவு செலவு ஒன்று பாக்கி யில்லாமல் தெரிந்து கொண்டு விட்டார். இந்தப் பிரகிருதியைக் காண எனக்கு ஒரு பக்கம் சிரிப்பாகவும் இன்னொரு பக்கம் எரிச்சலாகவும் இருந்தது. இருந்தாலும் பொழுது போக வேண்டுமே என்பதற்காக அவருடன் ஊரைச் சுற்றிப் பார்க்கக் கிளம்பினேன். சளசள வென்று பேசிக் கொண்டே வந்த அவர், "என் ஸார், அண்ணாசாமியைப் பற்றி உங்களுடைய அபிப்பிராய மென்ன?" என்ற கேள்வியைப் போட்டு, என்னைத் திகைக்க வைத்தார்!

"எனக்கு என்ன ஸ்வாமி தெரியும்? எத்தனையோ காலத்துக்குப் பிறகு அவனை இப்போதுதான் பார்க்கிறேன். நான் கண்ட வரையில் அடக்கமும் மரியாதையும் நிறைந்தவன் என்றே கூறுவேன்" என்றேன்.

என் அறியாமையைக் கண்டு இரங்குபவர்போல அவர் என்னை ஒருமுறை ஏற இறங்கப் பார்த்துவிட்டு, "பெண்டாட்டியைப் பட்டினி போட்டுக் கொன்ற பாவி ஸார், அவன்!" என்றார்.

நான் திகைத்துப் போனேன். 'பட்டப் பகலை இரவென்று சொல்லும் பாதகன் இவன்!' என்றே நான் அப்போது எண்ணினேன்.

அவர் அதோடு நிற்கவில்லை; "கள்ள மார்க்கெட்டிலே கொள்ளைப் பணம் சம்பாதிக்கிறான் அவன்! வேஷம் போடுகிறான் ஸார், வேஷம்!" என்றார்.

நான் மௌனமாகவே யிருந்தேன். இதற்குள் நாங்கள் அந்த ஊர் வாசக சாலைக்கு வந்து சேர்ந்தோம். உள்ளே அதிகக் கூட்டம் இருக்கவில்லை. பத்திரிகை படித்துக் கொண்டிருந்த நடுத்தர வயதுள்ள ஒருவரைச் சுட்டிக் காட்டி, என் புது நண்பர் என்னிடம் ரகசியமாக, அவர் ஓர் உணவுச் சேகரிப்பு ஏஜெண்டு என்பதையும், வாசகசாலை மாடியில்தான் ஜாகை வைத்துக் கொண்டிருக்கிறார் என்பதையும் தெரிவித்தார். உபரி நெல் யார் யாரிடம் இருக்கிறது என்பதைக் கண்டுபிடிக்க அவர் என்ன என்ன பகீரதப் பிரயத்த

ங்கள் செய்து வருகிறார் என்பதையும் அவர் ஒரு மூச்சு விவரித்தார்.

என்னுடைய புதிய நண்பரின் பெயர் லக்ஷ்மண சாஸ்திரி என்றும், பக்கத்து ஊர் போர்டு ஹைஸ்கூலில் தலைமை உபாத்தியாயராக இருந்து 'ரிடய'ரானவர் என்றும், அவருக்கு ஏழு பெண்களும், மூன்று பிள்ளைகளும் இருக்கிறார்கள் என்றும், நாலு பெண்கள் விவாகத்துக்குக் காத்திருக்கின்றனர் என்றும் நான் கேட்காமலேயே அவர் சொல்லத் தெரிந்து கொண்டேன். கடைசியில் அந்த 'சக்கப் பிச்சு'விடமிருந்து எப்படியோ விடுதலை பெற்று வீடு திரும்பினேன். ஹோட்டலிலிருந்து சாப்பாடு வந்திருந்தது. சாப்பிட்டுவிட்டுப் பிரயாணக் களைப்புத் தீர உறங்கினேன்.

★

நான் விழித்துக் கொண்டபோது மணி ஐந்துக்கு மேலாகிவிட்டது. காப்பி, டிபன் சாப்பிட்டுவிட்டு அந்த அழகிய வீட்டின் மேல் மாடிக்குச் சென்றேன். ஆமதாபாத் மில்களுக்கிடையே வாழ்ந்து வறண்டு போன என் கண்களுக்குச் சுற்றிலும் நான் கண்ட மோகனக் காட்சி குளிர்ச்சியைத் தந்தது. மாலைக் கதிரவன் பயிர்களுக்கும் பச்சைகளுக்கும் பொன் மூலாம் பூசிக் கொண்டிருந்த அந்த அதிசயக் காட்சியில் நான் என்னையே மறந்திருந்தேன்.

இருட்டினதும் கீழே இறங்கி வந்தேன். அண்ணாசாமி வரும் வரையில் பொழுதை எப்படிப் போக்குவது என்று யோசித்துக் கொண்டிருந்த எனக்கு, அன்று காலை அவன் தன் புத்தகசாலையைப் பற்றிக் குறிப்பிட்டது நினைவுக்கு வந்தது. புத்தகமொன்று எடுத்து வாசிப்போம் என்று அந்த அறையைத் தேடிச் சென்றேன்.

கண்ணாடிக் கதவுகள் அமைத்தவையும், வெறும் மரக் கதவுகள் அமைத்தவையுமாகப் பல பீரோக்கள் அந்த அறையின் நாலு புறங்களிலும் சுவர்களில் அமைக்கப்பட்டிருந்தன. ஆயிரக்கணக்கான புத்தகங்கள் — மேனாட்டு இலக்கியங்கள், நம் நாட்டு இலக்கியங்கள் எல்லாம் — வெவ்வேறு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு, பீரோக்களில் ஒழுங்காக அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. ஒரு தனிப்பட்ட நபர் இவ்வளவு கருத்துடன் புத்தகங்களைத் தேர்ந்தெடுத்துப் புத்தகசாலை அமைத்திருந்தது எனக்கு ஆச்சரியமாகவே இருந்தது. அவன் ஓர் உயர்ந்த ரஸிகன், அறிவாளி என்பதை அவை உணர்த்தின. அவற்றையெல்லாம் பார்க்கும்போது, லக்ஷ்மண சாஸ்திரி, அண்ணாசாமியைப் பற்றிச் சொன்னவை நம்பக்கூடியவையாகவே எனக்குத் தோன்றவில்லை.

ஒவ்வொரு பீரோவாகத் திறந்து பார்த்த வண்ணம், வெறும் மரக் கதவுகள் அமைத்த பீரோ ஒன்றுக்கு வந்தேன். என்ன ஆச்சரியம்! அது காலியாக இருந்ததோடல்லாமல் குறுக்குப் பலகைகள் இல்லாத ஒரே அறையாகவும் இருந்தது. அதைப் பார்த்ததும் எனக்குள் ஏதோ ஒரு சந்தேகம் தோன்றி, அதன் பின்பாகத்தைக் கைகளால் அழுத்திப் பார்க்கச் செய்தது. அழுத்தினதும் கதவு போல அது திறந்து கொண்டது. ஓடிச் சென்று என் 'டார்ச்'





"என்னடா! நடிப் பயல் மாதிரி இருக்கே. பிச்சை யெடுக்கக் கிளம்பிட்டியே! உடம்பு வளைஞ்சு வேலை செய்யறதுக்கு என்ன?"

"உடம்பு வளைஞ்சு வேலை செஞ்சிக்கிட்டுத் தானுங்க இருந்தேன். ஒரு தடவை உயிருக்கே ஆபத்தாப் போச்சி! அதிலிருந்து விட்டு விட்டேனுங்க!"

"என்னடா அது. என்ன ஆபத்து?"

"ஒரு சர்க்கஸ் கம்பெனியில் வேலையா யிருந்துக்கிட் டிருந்தேனுங்க!"

---

விளக்கை எடுத்து வந்து கதவுக்குப் பின் புறம் வீசினேன். அவ்வளவுதான்; அதன் வெளிச்சத்தில் ஒரு சுரங்க வழி கதவுக்குப் பின்புறம் செல்வதைக் கண்டேன். சற்றும் யோசியாமல் உள்ளே பிரவேசித்து அதன் வழியாக மெல்ல நடந்து சென்றேன். சிறிது தூரம் சென்றதும் பின்னும் ஒரு கதவு; அதையும் திறந்துகொண்டு உள்ளே நுழைந்தேன். நான் நின்றது ஒரு சுரங்க அறை — அங்கே நான் கண்ட காட்சி என்னைப் பிரமிக்க வைத்தது!

அந்த அறையின் நான்கு பக்கங்களிலும் சுவரோடு சுவராக. இரண்டிரண்டு வரிசைகளாகச் சாக்கு மூட்டைகள் அடுக்கி வைக்கப்பட் டிருந்தன. அதுவும் மூட்டைகளுக்குக் குறைவில்லை! மூட்டைகளைத் தவிர அங்கு வேறு ஒரு சாமானும் இல்லை. சந்தேகமென்ன, மிராசுதார் வீட்டில் சுரங்க அறையில் அரிசி மூட்டைகள்தாமே பதுக்கப் பட்டிருக்கும்!

ரகசியத்தைக் கண்டு பிடித்து விட்ட எனக்கு அங்கே மூச்சு விடக்கூட பயமாக இருந்தது. வந்த வழியாகத் திரும்பிச் சென்றேன், பழையபடி கதவுகளைச் சாத்திக் கொண்டு!

அரிசி கிடைக்காமல் பட்டினியால் மக்கள் நாட்டின் பல பாகங்களிலும் வாடும் போது, மிகவும் பெரிய மனிதன் என்று மதிக்கப்படும் ஒருவன், காங்கிரஸ் வாதி, கதருடை தரிப்பவன், தன் பூமியில் விளையும் நெல்லைப் பதுக்கிக் கள்ள மார்க்கெட்டில் விற்கத் துணிவது எவ்வளவு அநியாயமான காரியம்? லக்ஷ்மண சாஸ்திரி அவனைப் பற்றிக் கூறியது அவ்வளவும் உண்மையாகத்தான் இருக்கவேண்டும்! எந்தப் புற்றில் என்ன பாம்பு இருக்குமோ, யார் கண்டார்கள்?

ஆயினும், நாம் வந்த காரியமென்ன? நாம் ஏன் இந்த ரகசியத்தை வெளியிட வேண்டும்? வெளியிடுவதில் நமக்கென்ன லாபம்?—என்றெல்லாம் சிந்தனை ஓடிற்று. கூடவே, அங்கிருந்த அரிசியைக் கொண்டு நூற்றுக் கணக்கானவர்களின் பசிப் பிணியைப் போக்கக் கூடுமே என்ற எண்ணமும் உண்டாயிற்று. சுயநலமும் பொது நலமும் போராடி என் மனதைக் குழப்பின. கடைசியில், 'வந்தது வரட்டும்; நம் கடமையை நாம் செய்து விடுவோம்' என்று வாசகசாலையி லிருந்த சர்க்கார் ஏஜெண்டைத் தேடிச் சென்று, அவரிடம் விவரங்களைத் தெரிவித்தேன்.

அவர் முதலில் என்னை நம்பவே மாட்டேன் என்றார். தன்னிடமிருந்த உபரி நெல்லை அண்ணாசாமி வெகு நாட்களுக்கு முன்னரே தானாகக் கொடுத்துவிட்டான் என்று சொன்னார். நான் மிகவும் வற்புறுத்தியதன்மேல் ஆள் ஒருவனை அழைத்துக் கொண்டு என்னுடன் வந்தார். மூட்டைகளைக் கணக்கிடச் சொல்லிக் குறித்துக் கொண்டு மறுநாள் காலையில் வருவதாகக் கூறிச் சென்றார்.

★

அப்போது மணி ஏழரை யாகி யிருந்தது. நான் அண்ணாசாமியின் வரவை எதிர்பார்த்து உட்கார்ந்திருந்தேன். யோசிக்க, யோசிக்க நான் செய்த காரியம் தப்பு என்றே எனக்குப் பட்டது. அவனுடைய விருந்தாளியாக வந்து விட்டு, அவனுக்கு இவ்விதம் துரோகம் செய்தது அழகல்ல என்று என் நெஞ்சு குத்திக் காட்டிற்று. 'பணக்காரனாயிற்றே, நமக்கு ஆபத்து என்றால் உதவக்கூடிய உறவினன் அவன் ஒருவன்தானே!' என்ற எண்ணத்தால், அவன் விரோதத்தைச் சம்பாதித்துக் கொள்ளும் காரியத்தைச் செய்தது எனக்கு வருத்தத்தை அளித்தது. நெடு

நேரம் யோசித்த பிறகு, நான் ஒரு முடிவுக்கு வந்தேன். அண்ணாசாமி வந்ததும் அவனிடம் எல்லாவற்றையும் சொல்லிவிடுவோம். மறுநாள் காலை ரகசியம் வெளியாகி அவனுடைய மானம் போய்விடாமலிருக்க, அவன் அந்த ஏஜெண்டைக் கலந்து உடனே ஏதாவது ஏற்பாடு செய்து கொள்ளட்டும் என்று தீர்மானித்தேன்.

அண்ணாசாமி வந்ததும் அவனிடம் நடந்ததை ஒன்று விடாமல் கூறினேன். அவன் முகத்தில் அளவற்ற ஆச்சரியம் தென்பட்டது. நான் முடிக்கும் வரையில் அவன் வாயைத் திறக்கவே யில்லை!

கதைகளில் படிப்பது மாதிரி, நான் சொன்னதைக் கேட்டவுடன் அவன் அடியற்ற மரம்போல் மூர்ச்சையாகி விழுவான் என்று நான் எதிர்பார்த்த தெல்லாம் வீணாயிற்று. அதற்குப் பதிலாக அவன் எவரெஸ்ட் சிகரத்தைப் போல் கம்பீரமாகவே நின்று கொண்டிருந்தான்!

பிறகு சாவதானமாக, "மிஸ்டர் நடேசன்! உங்களில் ஒருவராவது அந்த மூட்டைகளில் என்ன இருக்கிறது என்று தெரிந்து கொள்வதற்காக மூட்டையைக் குத்திப் பார்க்கவே யில்லையா?" என்றான்.

"இல்லை!" என்றேன்.

"அட பாவிகளா! அவை அத்தனையும் மணல் மூட்டைகள்! நீங்கள் பார்த்தது ரகசியக் களஞ்சிய மல்ல. சென்ற யுத்தத்தின்போது பிரத்தியேகமாக நான் அமைத்துக் கொண்ட பாதுகாப்பு அறைதான்!" என்று கூறி, அவன் இடி இடி யென்று சிரித்தான்!

என் முகம் அப்போது விளக்கெண்ணெய் சாப்பிட்டவனுடைய முகம் மாதிரி இருந்திருக்கவேண்டும்! அதைக் கவனித்ததினாலோ என்னவோ, அவன் பெருந்தன்மையுடன், "இதை ஒரு பெரிதாக எடுத்துக்கொண்டு வருத்தப்பட வேண்டாம். நாளைக்கு ஏஜெண்டு வந்தால் உண்மை தானாக வெளிப்படுகிறது. எல்லோருமாக இந்த ஹாஸ்யத்தைச் சுவைத்துச் சிரித்துவிட்டுப் போவோமே! அது போகட்டும்; நீங்கள் வந்த காரியத்தைச் சொல்லுங்கள்!" என்றான்.

மறு விவாகப் பேச்சை எடுத்ததும் அவன் கண்களில் நீர் துளித்தது. "நான் என்ன செய்வேன்? தெய்வமல்லவா அவளைப் பட்டினி போட்டுக் கொன்றது? அவளுக்கு வயிற்றில் ரணம் கண்டது. ஆரம்பத்திலேயே என்னிடம் ஒன்றும் சொல்லாமல் மறைத்து விட்டான். பின்னால் என்ன செய்தும் பயன்படவில்லை!" என்றான்.

கடைசியில், அன்றே விலாசினியின் விவாகமும் நிச்சயமாயிற்று. நான் மனத்திருப்தியுடன் அவனுடைய அருமையான குணத்தை எண்ணி யெண்ணி வியந்த வண்ணம் அன்று இரவைக் கழித்தேன். நல்லவன் என்றால் நாலு விரோதிகளும் இருப்பார்கள் என்பதையும் உணர்ந்தேன்.

# நாற்காலி நாடகம்

எஸ். வி. எஸ்.

"பத்திரிகையிலே நம்ம பேரு நல்லா அடிபடவில்லையே!" என்பதுதான் ஸ்ரீமான் நல்லசிவம் பிள்ளையின் நீண்டநாளைய குறை.

'கனம் கண்ணாடி ராயர் கடலூர் வருகிறார்', 'அகோராச்சாரியாரின் அற்புத சொற்பொழிவு மாரி', 'டாக்டர் டால்டன் துரை வெகு நாட்களுக்குப் பிறகு மூச்சுவிட ஆரம்பித்திருக்கிறார்' என்பன போன்ற செய்திகள் பத்திரிகைகளில் வரும்போதெல்லாம் நம்முடைய பெயர் என்று இதுபோல் அடிபடுமோ என்று நினைத்துப் பெருமூச்சு விடுவார் நல்லசிவம் பிள்ளை.

கனம் கண்ணாடி ராயர் பெயர் இவ்வளவு தூரம் அடி படுவதற்குக் காரணம் அவர் அணிந்திருக்கும் மூக்குக் கண்ணாடிதான் என்பது நல்லசிவம் பிள்ளையின் தீர்மானமான முடிவு. ஆகவே, நல்லசிவம் பிள்ளையும் மூக்குக் கண்ணாடி அணிந்து பார்த்தார். எனினும் அவருடைய பெயர் பத்திரிகையில் வரவில்லை.

அப்படியே, அகோராச்சாரியாரைப்போல் தானும் துவாதசத் திருமண் சாற்றிக் கொண்டு பார்த்தார். எவ்வளவு பலமாகச் சாற்றியும் பெயர் பத்திரிகையில் அடிபடவில்லை.

இவ்வாறு என்ன என்னவெல்லாமோ செய்து பார்த்தார் நல்லசிவம் பிள்ளை. ஆனாலும் அவருடைய பெயர் பத்திரிகையில் அடிபடுவதாகக் காணோம். இந்த மனோவியாகூலத்துடன் ஒருநாள் அவர் பத்திரிகையைப் புரட்டியபோது,

"ஆதிகேசவலு முதலியாரின் அறுபதாவது ஆண்டு நிறைவு விழா அண்ணாரங்காச்சாரியார் தலைமையில் நடைபெறும். அவ்வமயம் அன்னாரின் குணதிசயங்களைப் பற்றி அன்பர்கள் பலர் சொற்பொழிவு ஆற்றுவார்கள்."

என்ற செய்தி வெளியாகியிருந்தது.

இதைப் பார்த்த நல்லசிவம் பிள்ளைக்கு ஒரு யோசனை தோன்றியது. 'இந்தக் கூட்டத்தில் கலந்து கொண்டு இரண்டு வார்த்தை பேசி வைத்தால் நம் பெயர் தன்னாலே பேபரிலே வருது' என்று தீர்மானித்துக் கொண்டு தனி உற்சாகத்துடன் புறப்பட்டார்.

புறப்பட்டார் என்றால் சும்மாவா? நல்ல மல் துணியை எடுத்து மூலக்கச்சம் கட்டிக் கொண்டார். நெற்றியில் பெரிய பொட்டு அணிந்து கொண்டார். தலையில் ஒன்றரை முழத்துக்கு ஒரு தலைப்பாகை யணிந்து கொண்டார். கோட் போட்டுக் கொண்டார். கெய்யைத் தடவி மீசையை முறுக்கிவிட்டுக் கொண்டார். கையில் 'வாக்கிங் ஸ்டிக்'குடன் கம்பீரமாக யானை நடப்பதுபோல் நடந்து சென்றார். உள்ளத்தில் ஆனந்த அலைகள் கும்மாளம் போட்டன.

கூட்டத்தில் பிரமாத ஏற்பாடுகள். வந்தவர்களை யெல்லாம் உபசாரம் பண்ணி நாற்காலியில் உட்கார வைத்தார்கள். ஸ்ரீமான் நல்லசிவம் பிள்ளையும் ஒரு நாற்காலியில் உட்கார்ந்தார். விழா ஆரம்பமாயிற்று.

முதலில் பேசிய தமிழ்ப்புலவர் முக்கண்ணனார், முக்கால் மணி நேரம் பேசி ஜனங்களையும் தலைவரையும் தூங்க வைத்தார். அடுத்தாற்போல் பேசிய ராவ்பகதூர் அரங்கநாத முதலியார் ஆங்கில மொழியில் வார்த்தைகளை அள்ளி வீசித் திணற வைத்தார். இப்படிப் பலர் பேசி, தலைவரின்பொறுமையை ரொம்பவும் சோதித்துவிட்டார்கள்.



ஆனால் கருமமே கண்ணாயிருந்த நம் நல்லசிவம் பிள்ளையோ தன்னை எப்படி தலைவரிடம் அறிமுகப்படுத்திக்கொள்வது என்று தெரியாமல் தவித்துக் கொண்டிருந்தார்.

கடைசியில் ஒரு துண்டுக் கடிதம் எடுத்து தலைவருக்குப் பின்வருமாறு எழுதினார்.

"ஐயா,

ஆதிகேசவலு முதலியார் என்னுடைய நீண்ட நாளைய நண்பர். அவரைப் பற்றிப் பேச எனக்கும் ஒரு சந்தர்ப்பம் அளிக்குமாறு கேட்டுக் கொள்ளுகிறேன்.

இப்படிக்கு,

நல்லசிவம் பிள்ளை."

மிகவும் அலுத்துப்போன சமயத்தில், இந்தத் துண்டுக் கடிதத்தைப் பார்த்த தலைவர், பொறுமையிழந்து அதைச் சுக்கு நூறாகக் கிழித்துப் போட்டார்!

இதைப் பார்த்த நல்லசிவம் பிள்ளை ரொம்பவும் ஆத்திரங் கொண்டு, "ஐயா, ஒரு மனுஷன் ஐந்து நிமிஷம் பேச அனுமதிக்கக் கூடாதா? எனக்கு எப்படியும் ஐந்து நிமிஷம் பேச அனுமதி கொடுத்தே யாகவேண்டும்" என்று இரைந்தார், தன் இருப்பிடத்தை விட்டு எழுந்திருந்து.

"ஐந்து நிமிஷமா, ஐந்து வினாடி கூட இனி யாருக்கும் அனுமதி தர முடியாது" என்று அழுத்தம் திருத்தமாகச் சொன்னார் தலைவர்.

நல்லசிவம் பிள்ளை எவ்வளவோ நல்லவர் தான். ஆனால் இந்தச் சமயம் அவர் ரொம்பப் பொல்லாதவராகப் போய் விட்டார். தலைவர் அவ்விதம் கூறியதும், தன்னுடைய நீண்ட நாள் மனக்கோட்டை தகர்ந்து பொடியாவது போல் அவருக்குத் தோன்றியது. இனி பத்திரிகையில் தம் பெயர் வெளியாவதற்கு மார்க்கமே கிடையாது என்று தீர்மானித்து விட்டார். 'இனி இந்த உலகில் இருந்து என்ன பிரயோசனம்? இருப்பதைவிட இறப்பதே மேல்' என்று கருதி விட்டார். எனினும் இந்தத் தலைவருக்கு ஒரு பாடம் கற்பிக்கவேணும் என்று தமக்கு வந்த கோபத்தில் தாம் உட்கார்ந்திருந்த நாற்காலியைத் தூக்கித் தலைவர் தலையை நோக்கி விட்டெறிந்தார். நல்ல வேளை, தலைவரின் தலைக்கு வந்தது அவர் தலைப்பாகையோடு போயிற்று!

நாற்காலி பறக்க ஆரம்பித்தவுடன் கூட்டத்தில் அமைதி குலைந்து குழப்பம் உண்டாயிற்று. எல்லோரும் நல்லசிவம் இருந்த திசையை நோக்கிப் பாய்ந்தனர். ஒருவர், "என்ன ஐயா, உமக்கு மூளை குழம்பி விட்டதா?" என்றார். இன்னொரு ஆசாமி, "உதைடா!" என்று ஆரம்பித்தான். அவ்வளவுதான்; உடனே அவர் முதுகில் 'தபதபதபா' என்று சோனாமாரிபோல் குத்துகள் விழுந்தன.

பாவம், நல்லசிவம் பிள்ளை உதையும் குத்தும்பட்டு அவமானம் அடைந்து மனச் சோர்வுடன் வீட்டுக்கு வந்து படுத்து விட்டார்.

மறுநாள் அவர் படுக்கை யருகிலே வேலைக்காரப் பையன் வழக்கம்போல் அன்றைய தினப் பத்திரிகையைக் கொண்டு வந்து வைத்தான். அதைப் பிரித்துப் பார்ப்பதற்கே அவருக்கு அலுப்பாக இருந்தது. ஆனால் கொஞ்ச நாழிகைக்குள் அங்கே வந்த அடுத்த வீட்டுக்காரர், "என்ன, பிள்ளைவாள்! தங்கள் பெயர் பத்திரிகையில் ரொம்பவும் அடிபடுகிறாப் போலிருக்கிறதே!" என்றார்.

அதைக் கேட்ட நல்லசிவம் பிள்ளை அடைந்த ஆச்சரியம் இவ்வளவு அவ்வளவு அல்ல. "என்ன? என்ன?" என்று கேட்டுக் கொண்டே துள்ளி எழுந்து உட்கார்ந்தார்.

"என்ன ஐயா, இன்றைய பேப்பரிலே உம்ம பெயர் அமர்க்களப்படுகிறதே!" என்றார் அடுத்த வீட்டுக்காரர்.

உடனே ரொம்ப ஆவலுடன் நல்லசிவம் பிள்ளை தினப்பத்திரிகையை எடுத்துப் புரட்டினார்.

"நல்லசிவம் பிள்ளையின் நாற்காலி நாடகம்"

என்று கொட்டை எழுத்தில் ஒரு தலைப்புப் போட்டிருந்தது. அதைப் பார்த்ததும் நல்லசிவம் பிள்ளைக்கு ஏற்பட்ட ஆனந்தம் சொல்லி முடியாது. அத்துடன் நில்லாமல், ஒரு பத்தி முழுதும் அவரைப்பற்றியே எழுதியிருந்தது! அதைப் படித்துப் படித்து ஒரே அடியாய்க் குதூகலமடைந்தார். தம்முடைய ஜன்மம் சாபல்ய மடைந்து விட்டதாகவும் கருதினார்!

இவருடைய இந்தக் குதூகலத்தைப் பார்த்த அடுத்த வீட்டு நண்பர், "என்ன இப்படி ஒரேயடியாய்க் குதூகலப்படுகிறீர்களே!" என்று கேட்டார்.

"கோயிலும் குளமும் கட்டி, போலீஸ் குண்டாந் தடியும் சிறைவாசமும் அனுபவித்து எத்தனையோ பேர் பிரபலமடைய, நான் ஒரே ஒரு நாளில் எவ்வளவு பிரக்யாதி யடைந்து விட்டேன்! அப்படியானால், நீங்களே யார் கெட்டிக்காரர் என்று சொல்லுங்களேன்!" என்றார் ஸ்ரீமான் நல்லசிவம் பிள்ளை ஒரே உற்சாகத்துடன்.

# பொன் விழாவின் உதயம்



பண்டிட் டி. கோபாலாச்சார்லுவின்

# ஜீவாம்ருதம்

வியாதியினால் அவதிப்படும் மனித சமூகத்துக்கு சேவை புரிவதில் ஐம்பதாவது வருஷம் ஆரம்பமாகின்றது. என்றும் போல் இன்றும் ஜீவாம்ருதம் வியாதிக்குப் பின் குணம் பெறுவோர், பலஹீனர் ஆகியவருக்கும் உகந்த அருமையான டானிக்காக விளங்குகிறது.



## ஆயுர்வேதாஸ்ரமம் லிட்.

## மதராஸ் 17

---

# "எவர்ஸில்வர்"

## பாத்திரங்கள்

வெள்ளியின் அந்தமும் இரும்பின் உறுதியும் ஒருங்கே கொண்டவை

(பம்பாய் தேவிதயாள் கம்பெனியாரால் தயாரிக்கப்பட்டவை)



வீடுகளுக்கும் விடுதிகளுக்கும் ஹாஸ்டல்களுக்கும் ஹோட்டல்களுக்கும்

பிரகாசம் தருகின்ற பலபலவிதப் பாத்திரங்கள்

அடுக்குகள், அடுக்குஸெட்டுகள், தட்டுக்கள், தாம்பாளங்கள், டம்ளர்கள், டபராக்கள், கிண்ணங்கள், கரண்டிகள்

ஒரு முறை வந்து பாருங்கள்

# ஸாம்ஸன் & கோ.

சுதேச சமஸ்தானங்கள், இலங்கை உள்பட தென்னிந்தியாவிற்குப் பூரண விநியோகஸ்தர்கள் :

8/22, பிராட்வே, மதராஸ்

தந்தி: "BARAPASH"] [போன்: 4521

சித்தூர், செங்கல்பட்டு, சேலம், வட ஆற்காடு, கோயமுத்தூர், திருநெல்வேலி ஆகிய ஜில்லாக்களுக்கும், சுதேச சமஸ்தானங்கள், இலங்கை ஆகிய இடங்களுக்கும் சப்-டீலர்களாக விரும்புவோர் எழுதவும்.



# வேஷம் பலித்தது

**விஜயம்**

ராஜகுமாரன் வீரசிம்மனுக்கு ஒரே கவலையாயிருந்தது. என்ன செய்வது என்றே தோன்றவில்லை. மணந்து கொண்டால் அந்த ராஜகுமாரியையே மணந்து கொள்ளுவது, இல்லாவிட்டால் மணமே செய்து கொள்ளுவதில்லை என்று திர்மானம் செய்துவிட்டான். ஆனால் அந்த ராஜகுமாரியின் தகப்பனார் ரொம்பப் பொல்லாதவர்; மிகவும் கர்வம் பிடித்தவர். பெரிய ராஜாவாகிய அவர் தம் பெண்ணை இந்தச் சின்னஞ் சிறு தேசத்து இளவரசனாகிய வீரசிம்மனுக்குக் கல்யாணம் செய்து கொடுப்பாரா?

வீரசிம்மன் எவ்வளவோ முயற்சி செய்து பார்த்தும், அவனால் அந்த ராஜகுமாரியை மறக்க முடியவில்லை. ஆகவே, அவன் ராஜகுமாரியை அடையும் முயற்சியையும் நிறுத்தவில்லை.

கடைசியில் அவன் முயற்சி பலன் கொடுத்தது. அவன் போட்ட திட்டப்படியே அவனுக்கு அந்த ராஜகுமாரியின் அரண்மனையில் மாடு மேய்க்கும் வேலை கிடைத்தது. வீரசிம்மனும் உற்சாகமாக அந்த வேலையைப் பார்த்து வந்தான்.

ஒரு நாள் அவன் அரண்மனை நந்தவனத்தில் உட்கார்ந்து, தன் புல்லாங்குழலை யெடுத்து அற்புதமாக ஊதினான். அந்தக் குழலிலிருந்து கிளம்பிய இனிய நாதம் அரண்மனை முழுதும் பரவி, ராஜகுமாரியை நந்தவனத்துக்கு வரும்படி செய்தது.

'ஒருவேளை கண்ணபிரானே மறுபடி பூவுலகத்துக்கு வந்து குழல் ஊதுகிறானோ!' என்று ராஜகுமாரிக்குப் பிரமை ஏற்பட்டது. உடனே அவள் பரபரப்புடன் நந்தவனத்துக்குப்



போய்ப் பார்த்தாள். 'என்ன இது! மாடு மேய்க்கும் இடையனா இவ்வளவு அற்புதமாகக் குழல் ஊதுகிறான்!' என்று நினைத்து, அங்கேயே அவனுக்குத் தெரியாமல் அசைவற்று நின்று, அவன் குழல் ஊதுவதைக் கேட்டுக் கொண்டிருந்தாள்.

சிறிது நேரத்துக்குப் பிறகு, "ஏன் அப்பா, இவ்வளவு அற்புதமாகப் புல்லாங்குழல் ஊதுகிறாயே! நீ ஏன் அரண்மனைக்கு வந்து வாசிக்கக் கூடாது?" என்று கொஞ்சுகிற குரலில் கேட்டாள் ராஜகுமாரி.

"நான் எதற்காக அரண்மனைக்கு வந்து குழல் ஊத வேண்டும்? என் மன நிம்மதிக்காகவே நான் குழல் ஊதுகிறேன். இந்த நந்தவனத்தில் குழல் ஊதினால்தான் எனக்கு மன நிம்மதி ஏற்படுகிறது!" என்றான் ராஜகுமாரன்.

"நீ அவசியம் அரண்மனைக்கு வந்து உன் குழல் ஊதித்தான் ஆக வேண்டும்!" என்றாள் ராஜகுமாரி.

"அரண்மனை மரியாதைகளுடன் என்னை அழைத்துப் போனால்தான் நான் அங்கு வருவேன்!" என்றான் ராஜகுமாரன்.

அதற்கு ராஜகுமாரி ஒப்புக்கொண்டாள். உடனே அவன் ராஜோபசாரங்களுடன் அரண்மனைக்கு அழைத்துச்செல்லப்பட்டான். அங்கே போனதும் அவன் தன் புல்லாங்குழலை எடுத்து ஊதினான். அரண்மனையில் இருந்த அத்தனை பேரும் தங்களையே மறந்து விட்டார்கள்!



அப்போதுதான் வேட்டைக்குப் போயிருந்த மஹாராஜா திரும்பி வந்தார். அந்த இடைப் பையனுக்கு அருகில் ராஜகுமாரி உட்கார்ந்து வேணு கானத்தை ரஸிப்பதைப் பார்த்ததும் ராஜாவின் கோபம் பிரமாதமாகி விட்டது.

"ஓகோ! நீ செய்த வேலைதானா, இவ்வளவும்! இவ்வளவு மரியாதை செய்து மாடு மேய்ப்பவனை அரண்மனைக்கு அழைத்து வந்தால் ராஜாவாகிய என் கௌரவம் என்னவாகும்? இனி இந்த அரண்மனையில் உனக்கு இடமில்லை. ஓடு வெளியே!" என்று அடங்காத கோபத்துடன் கத்தி விட்டு, ராஜா போய்விட்டார்.

ராஜகுமாரனும் ராஜகுமாரியும் வெளியேறி அவ்வூரை யடுத்த காட்டை யடைந்தனர்.

"வாஸ்தவமாகவே நீ மாடு மேய்ப்பவன்தானா?" என்று வருத்தங் கலந்த குரலில் கேட்டாள் ராஜகுமாரி.

உடனே இடையனாயிருந்த ராஜகுமாரன் தன் வேஷத்தைக் கலைத்து விட்டு, "ராஜகுமாரி, உன்னைக் கல்யாணம் செய்து கொள்ள வேண்டும் என்னும் ஆசையினால்தான் உன் தகப்பனாரின் அரண்மனையில் நான் மாடு மேய்ப்பவனாக வேலைக்கு அமர்ந்தேன். உன் தகப்பனார் உன்னை எனக்குக் கல்யாணம் செய்து கொடுக்க மாட்டார் என்பது எனக்கு நன்றாய்த் தெரியும். ஆனால் இப்பொழுது நீயும் நானும் சமமாகி விட்டோம். உனக்குச் சம்மதந்தானே?" என்று கேட்டான்.

ராஜகுமாரி ஒரு புன்னகையின் மூலம் தன் சம்மதத்தைத் தெரிவித்தாள். ராஜகுமாரன் உடனே தன் ஊருக்குச் சென்று அவளை விவாகம் செய்து கொண்டான். இடையன் வேஷம் பூண்டவன் ராஜகுமாரன் தான் என்று தெரிந்ததும் ராஜகுமாரியின் தகப்பனார் கோபமும் தணிந்தது.




தி. சேஷாத்திரி

இரண்டாம் முறையாக நான் ஆறு மணிக்கு வீட்டுக்கு வந்தபோதும் அந்தத் தாழம்பூ அப்படியே கண்ணைக் குத்திக் கொண்டு மேஜைமேல் வைத்தபடி இருந்தது.

அன்று ஆபீசில் ஒரு தகராறு. அவசரத்தில் ஒரு ஜோர்க்கை கம்பினதன் பலன் ஆபீசர் கோபத்துக்கு ஆளாகியிருந்தேன். மறுபடியும் போன காரியம் தோல்வி. இருந்தாலும் தாழம்பூவை மேஜைமேல் பார்க்காமல் அவள் தலையில் பார்த்திருந்தால் எல்லாவற்றையும் மறந்திருப்பேன்; அலைந்திருந்த மனமும் ஆத்திர மடைந்திருக்காது!

என்ன ராங்கி! இந்தப் பெண்ணுலகமே நன்றி கெட்டதுதான் போலும்! இவளிடம் நான் காட்டும் அன்புக்கு இதுதானா கைம்மாறு? அவள்—என் முதல் மனைவி—இருந்தாளே, அவள் இப்படியா இருந்தாள்? அதனால்தானே பெண்ணுலகம் மறுபடி என்னை இழுத்தது!

தாழம்பூவைத் தலையில் வைத்துப் பின்னிக் கொள் என்றால் இவ்வளவு பிடிவாதமா? நாகரிகம் முற்றிப் போய்விட்டதோ? அல்லது, தாழம்பூ பிடிக்காதோ!

இரண்டு மணிக்கு அனுப்பின தாழம்பூ! நான்கு மணிக்கு வந்தபோதும் அங்கேயே இருந்தது! மறுபடியும் ஒருமுறை சொல்லிவிட்டு வெளியே போய்விட்டு வருகிறேன்; இப்பொழுதும் அங்கேயே இருக்கிறது! இந்த லட்சணத்தில் ஆறரை மணிக்குச் சினிமா போவதாக வேறு ஏற்பாடு!

எனக்குக் கோபம் பொத்துக் கொண்டு வந்தது. கூப்பிட்டுக் கேட்டு விடலாம் என்று எண்ணி, "பத்மா. பத்மா!" என்று அதட்டும் குரலில் கூப்பிட்டேன்.

அன்புக் குரல் கேட்டு ஆவலாய் ஓடி வருவது அவள் வழக்கம். இன்று அதட்டுக் குரல் கேட்டு அவள் திகைத்து வந்தாள்.

"ஏன், சினிமாவுக்கு வருவதில்லை என்ற தீர்மானமோ?" என்று குத்தும் குரலில் ஆரம்பித்தேன்.

"வருவதாகத்தான் ஏற்பாடு!" என்றாள் அவள்.

நான் உதட்டைக் கடித்தேன். கோபம் வெளியேறச் சரியான வாசல்தான் வேண்டும் என்பதில்லை; நெருப்புப் பிடித்த சினிமாக் கொட்டகையில் முட்டிக் கொள்ளும் ஜனத் திரள்போல் எங்கேயும் முட்டும் அது.

"அதற்கு இதுதான் வேஷமோ? ஏன், உன் அகமுடையான் செத்துவிட்டானா?"

அவள் நடுங்கி ஆடிவிட்டாள். "என்ன வார்த்தை சொல்கிறீர்கள்......!" என்று ஏதோ சொல்ல ஆரம்பித்தாள்.

"சரி, தொலையட்டும்! ஏன் இந்தத் தாழம்பூ இங்கேயே கிடக்கிறது? அவன் என்ன சொல்கிறது, நாம் என்ன கேட்கிறது என்ற எண்ணம்தானே?"

அவள் உதடுகள் துடித்தன. கண்கள் நீர் சுரந்தன. தொண்டையில் ஏதோ வந்து அடைத்துக் கொண்டது.

"என்ன, ஒரு பதிலையும் காணோம்! தாழம்பூ பிடிக்காதோ?"

"பிடிக்கவில்லை என்று யார் சொன்னார்கள்?......ஆனால் அதை வைத்துக் கொள்ளும்படி நீங்கள் என் பிடிவாதம் செய்கிறீர்கள்?"

"ஓகோ! இதில்கூட உன் இஷ்டமோ? சரி, இனிமேல் நான் உன் முகத்திலும் விழிப்பதில்லை!" என்று சொல்லிவிட்டு, நாற்காலியை விட்டு எழுந்தேன்.

ஆனால், அடுத்த நிமிஷமே நான் உட்காரும்படி ஆகிவிட்டது. என் காலடியில் அவள் இருந்தாள். கண்ணீர் பெருக்கும் அவள் முகம் என் மடியில் கிடந்தது.

"சனியனே! இது என்ன சாகஸம்! என்ன காரணம் என்றுகூடச் சொல்லா

மன் நாடகமா போடுகிறாய்?" என்று அதட்டினேன்.

அவன் முகத்தைத் தூக்கினான். அந்த முகம் கல்லைக்கூடக் கரைத்திருக்கும். வாடிய தாமரை போல இருந்தது.

அவன் கெஞ்சும் குரலில், "நான் சொல்லு கிறேன்; ஆனால் நீங்கள்......" என்று விழித்தான்.

"என்ன?" என்றேன்.

"வித்தியாசமாய் எண்ணக் கூடாது! என்னை அதற்காகக் குறைவுள்ளவனாகவும் கருதக் கூடாது...ஊம்...?"

எனக்கு ஆத்திரத்துடன் ஆவலும் கலந்தது. 'சொல்' என்று சீறினேன். ஆனால் முறையே ஆச்சரியம், கோபம், பொறாமை, இரக்கம், படிப்பினை இவையனைத்தையும் ஏற்படுத்தும்படி அவன் ஒரு கதை சொல்வான் என்று எனக்கு அப்பொழுது தெரியாது. அவன் சொல்லியது இதுதான்:

• • •

எங்கள் ஊரில் கண்ணன் என்று ஒருவன் இருந்தான். நான் இருந்த தெருவுக்கு அடுத்த தெருவில் அவனுக்கு வீடு. பிள்ளையார் கோவிலுக்குப் பூஜை வைத்து, அதற்காக ஏற்பட்ட மானிய வரும்படியில் சாப்பிட்டு வந்தது அவன் குடும்பம்.

எனக்கும் கண்ணனுக்கும் இரண்டே வருஷம்தான் வயதில் வித்தியாசம். நாங்கள் எப்பொழுதும் சேர்ந்தே இருப்போம், விளையாடுவோம்.

ஒருநாள்—அப்பொழுது எனக்கு வயது பதினொன்று—நாங்கள் இருவரும் குளத்துக்குப் போனோம். மணி ஒன்றிருக்கும். அந்தக் குளத்தங்கரையில் ஒரு தாழங்காடு. அதில் பூக்கும் பூக்கள் பிள்ளையாருக்குச் சொந்தம். ஆகவே, கண்டவர்கள் பறிக்காதபடி கோவிலையும் தாழங் காட்டையும் சுற்றி வேலி போட்டுப் பூட்டியிருந்தார்கள்.

கண்ணன், "உனக்கு இன்று என்ன வேண்டும்?" என்று கேட்டான். நான் சுற்று முற்றும் பார்த்தேன். எதிர்க் கரையில் தாழம்புதரின் மேற்கிளையில் பூத்திருந்த தாழம்பூ கண்ணிற் பட்டது. "அதோ, அது!" என்று கையைக் காட்டினேன்.

அவன் சிரித்துக் கொண்டே, "அதை எப்படிப் பறிக்கிறது?" என்றான்.

"எனக்குத் தெரியாது. நீ கேட்டாய்; நான் சொன்னேன். அவ்வளவுதான்!" என்றேன்.

"சரி. அதற்குள் கோபித்துக் கொள்ளாதே! அது சரி, அதைக் கொண்டு வந்தால் நீ எனக்கு என்ன தருகிறாய்?" என்றான்.

"என்னிடம் இருக்கிறது எது வேண்டுமானாலும் கேள்!" என்றேன்.

"கலியாணம் செய்து கொள்வாயா?" என்றான்.

நாங்கள் குழந்தைகள். கலியாணம் என்றால் என்ன கண்டோம்? "சரி" என்றேன்.

அடுத்த நிமிஷம் குளத்தில் 'தடார்' என்ற சத்தத்துடன் குதித்த அவன், தண்ணீரைக் கிழித்துப் போய்க்கொண்டிருந்தான். சிறிது நேரத்துக்கெல்லாம் அவன் தாழம்பூவைப் பறித்துக் கொண்டு வந்துவிட்டான். என்னிடம் அதைக் கொடுத்தபோது, எனக்கு ஏற்பட்ட உணர்ச்சியை இன்று எப்படி வர்ணிப்பேன்!

இதேபோல் எத்தனையோ முறை அவன் தன் உயிரையும் பொருட்படுத்தாமல் எனக்கு அன்புக் காணிக்கைகள் பல செலுத்தியிருக்கிறான். நாங்கள் இருவரும் இப்படியே உலகமறியாமல் ஒன்றாய் வளர்ந்து வந்தோம். இதனிடையே எனக்கு வயது பதினொன்று ஆகிவிட்டது.



"இந்த ரூமிலே காற்று......"

"என்னது......?"

"இந்த ரூமிலே மட்டும் காற்று பிசாசு மாதிரி அடிக்கும், ஸார்!"

"ஐயையோ! அப்படின்னா இந்த ரூம் எனக்கு வேண்டவே வேண்டாம், ஸார்!"

முன்போல் வெளியே போகமுடியவில்லை. ஊரார் வேறு என் தாய் தந்தையைப் பரிகசிக்க ஆரம்பித்துவிட்டார்கள். கண்ணனைச் சந்திப்பதும் வெகுவாகக் குறைந்துவிட்டது. குளத்துக்குப் போய் வரும்போது பார்ப்பேன். அப்பொழுதும் பேசுவதைவிடப் பார்ப்பதுதான் அதிகமாக இருக்கும். அப்பா கலியாணத்துக்கு வரன் தேட ஆரம்பித்தார். அம்மா மெதுவாகக் கண்ணன் பேரைச் சொல்லிப் பார்த்தாள். அப்பாவோ, "போடி போ! பத்மாவுக்குப் பிரமாதமான அதிர்ஷ்டம் இருக்கிறது!" என்று சொல்லிவிட்டார். அவருக்கு ஜாதகத்தில் அபார நம்பிக்கை.

இரண்டு வருஷங்கள் இப்படியே கழிந்தன. நானும் உருத்தெரியாத ஒரு பணக்காரப் பட்டணத்து மாப்பிள்ளையைப் பற்றிக் கனவு கண்டு கொண்டு நாளைக் கழித்தேன். கண்ணனைப் பற்றி நான் தீவிரமாக எண்ணவே மறந்துவிட்டேன். ஆனாலும் அவன் அடிக்கடி எனக்குத் தாழம்பூ கொண்டு வந்து கொடுப்பதை நிறுத்தவில்லை. இதனிடையேதான் நீங்கள் என்னை வந்து பார்த்தீர்கள். பார்த்தவுடனேயே நீங்கள் என் உள்ளத்தை முற்றுகையிட்டு விட்டீர்கள்!

அன்று காலை அம்மா குளத்துக்குப் போயிருந்தாள். அப்பா எங்கேயோ போயிருந்தார். வாசலில் வந்து கண்ணன் கூப்பிட்டான். போய்ப் பார்த்தேன். வழக்கப்படி தாழம்பூ கொண்டு வந்திருந்தான். வாங்கக் கையை நீட்டினேன். உக்ர உருவம் குறுக்கே வந்தது. கையைப் பின்னுக்கிழுத்தேன். "வாங்கிக் கோடி! நம்ப கண்ணன்தானே!" என்றது பின்னே குளித்துவிட்டு இடுப்பில் குடமும், கையில் செம்புமாய் வந்து கொண்டிருந்த என் தாயாரின் குரல். நான் கண்ணில் நீர் மல்க உள்ளே ஓடி வந்துவிட்டேன். கண்ணன், "என்ன மாமி! என்ன கோபம், பத்மாவுக்கு?" என்று கேட்டான்.

"அசடு!" என்று என் தாயார் பதில் சொன்னாள். அன்றும் அவன் கொடுத்த தாழம்பூவையே வைத்துப் பின்னிவிட்டாள் அம்மாள்.

அன்று சாயந்திரம் என்னை அம்மனுக்கு நெய் விளக்கு ஏற்றிவிட்டு வரச் சொன்னாள் அம்மா. அவளுக்கு நீங்கள் 'சரி' என்று சொல்லிவிட்டுப் போனதில் ஏற்பட்டிருந்த சந்தோஷம்தான் அதற்குக் காரணம். நான் ஏற்றிவிட்டுத் திரும்பி வந்து கொண்டிருந்தேன். எதிரே வந்து நின்று இடை மறித்தான் கண்ணன்.

"பத்மா!"

அவன் முகம், குரல், ஒலி—எல்லாவற்றிலும் வாட்டம் காட்டிய மாதிரி.

"ஏன்டா, கண்ணா!" என்றேன்.

"நீ பட்டணத்தான் பெண்டாட்டியாகப் போகிறாயாமே!" என்றான்.

நான் சும்மா நின்றேன். அவன் தொண்டையை அடைக்கச் சொன்னான்:

"நீ கொடுத்த வாக்கை மறந்து என்னை ஏமாற்றிவிட்டாய்!"

"நான் என்னடா வாக்குக் கொடுத்தேன்?" என்று அதட்டினேன்.

"அதைக் கூடவா இல்லை என்கிறாய்? நீ மறந்தாலும் அது சாக்ஷி சொல்லுமே!" என்றான்.

அவன் குறித்தது தாழம்பூ! அதைக் கேட்ட எனக்கு உடம்பு பலமிழந்தது போல்



தோன்றிற்று. தலையிலிருந்த தாழம்பூ பாளங்கள்போல் கனத்தது. நாகம்போல் சீறிவிட்டு, அவனைத் தாண்டி வீட்டுக்கு ஓடிவந்து தலையை அவிழ்த்து உதறினேன்.

அம்மாவோ கவலை நிரம்பிய ஆச்சரியத்துடன், "இது என்னடி, அசடு! வெள்ளிக் கிழமையும் அதுவுமாப் பின்னிய தலையை விரித்து உதறுகிறாய்?" என்றாள்.

பிறகுதான் நான் செய்தது பிசகு என்று எனக்குப் புரிந்தது. உடனே உங்களைப் பற்றிய கவலை வந்து உடல் பூராவும் அடைத்துக் கொண்டது. "போ, அம்மா! தலையை வலிக்கிறது. நீ நெருக்கிப் பின்னிவிட்டாய்!" என்று ஏதோ சொல்லிவிட்டுத் தலையை மூடிக்கொண்டு உள்ளே போய்விட்டேன்.

அன்று இரவு முழுவதும் நான் தூங்கவில்லை. ஒருபுறம் நீங்கள்; மற்றொரு புறம் கண்ணன்! இருவரும் மாறுபட்ட என் எண்ணங்களை எழுப்பி எழுப்பி, என்னை வாட்டி வதைத்து எடுத்துவிட்டீர்கள்!




மறுநாளே கண்ணன் தன் அத்தை வீட்டுக்குப் போய்விட்டான். நீங்களும் உங்கள் வார்த்தை பிறழாமல் என்னைக் கலியாணம் செய்து கொண்டீர்கள். நான் இங்கு வந்தது முதல் இதுவரை கல்ல வேளையாகத் தாழம்பூவையே பார்க்கவில்லை. அதற்குச் சந்தர்ப்பமும் ஏற்படவில்லை."

* * *

கதையை இங்கே நிறுத்தினாள் அவள்.

எனக்குப் பலதரப்பட்ட உணர்ச்சி ஏற்பட்டது. ஆனால் எல்லாவற்றுக்கும் மேலே அர்த்தமற்ற பொறாமைதான் தலை தூக்கி நின்றது.

அவள் கதையை முடிக்கவில்லை. என்ன கேள்வி கேட்டு மறுபடி ஆரம்பிக்கலாம் என்று எண்ணுவதற்குள் அவளே ஆரம்பித்தாள். "அந்தக் கண்ணன், பாவம், மூன்றும் வருஷம் இறந்து விட்டானாம்! அதுவும் சாதாரணமாக இறக்கவில்லையாம். அத்தை வீட்டுக்குச் சென்ற அவன் சித்தப் பிரமை பிடித்தவன்போல் இருந்தானாம். அடிக்கடி குளக்கரையில் இருக்கும் தாழங்காட்டுக்குப் போய் ஏதாவது ஒரு மரக்கிளையில் உட்கார்ந்திருப்பானாம். சிலசமயம் தாழம்பூவை இதழிதழாகப் பிய்த்துப் பறக்க விட்டுக் கொண்டிருப்பானாம். ஒரு நாள் தாழங்காட்டில் நல்ல பாம்பு ஒன்று வந்து அவனைக் கடித்து விட்டதாம்......"

அதற்கு மேலே சொல்ல முடியாமல் அவள் நிறுத்தி விட்டாள். கண்களில் நீர் வேகமாகப் பாய்ந்து வர ஆரம்பித்தது.

என் மனம் துணுக்குற்றது. உண்மை! அப்படிப்பட்ட கண்ணன் ஞாபகம் எப்படி மறக்கும்? நான் என்ன சொல்லி அவளைத் தேற்றுவது?

ஆனால், அவளே தன் கண்ணைத் துடைத்துக் கொண்டு சொன்னாள்:

"அதனால்தான் தாழம்பூவைப் பார்த்ததும் எனக்கு அவன் ஞாபகம் வந்தது. இருந்தாலும் உங்கள் அன்புக்காக வைத்துக் கொண்டிருக்கலாம். ஆனால் ஒரு முறை தாழம்பூவை அவன் தன் அன்பின் அடையாளமாகச் சொல்லிவிட்டான்; நானும் அப்படியே

கருதி விட்டேன். பிறகு அதை அணிந்து உங்களுக்குத் துரோகம் விளைவிக்க நான் விரும்பவில்லை!"

இதைக் கேட்டதும், என் இருண்ட இதயம் திடீரென்று வெளிச்ச மடைந்தது போல் தோன்றிற்று. என்ன வெள்ளை உள்ளம்! எவ்வளவு உயர்ந்த நோக்கம்!

நானும் ஒரு மனிதன்போல் — சை! முதல் மனைவியை இழந்து இரண்டாம் மனைவியை மணந்து கொண்ட நான், இதோ, இவள் அன்பின் பலி பீடத்தில் உயிரையே தியாகம் செய்த ஒரு புருஷனுக்காக இரண்டு சொட்டுக் கண்ணீர்கூட விடக் கூடாதென்று எண்ணுகிறேன்! ஆனால் அவளோ, 'அதை, அவன் அன்பின் அடையாளத்தைத், தலையில் வைத்துக் கொண்டு உங்களுக்குத் துரோகம் விளைவிக்க விரும்பவில்லை!' என்கிறாள்!

"பத்மா, நான் பாவி!" என்று சொல்லி அவளைத் தூக்கினேன். "ஒன்றும் தெரியாமல் உன் பூப் போன்ற இதயத்தை அநியாயமாய்த் துளைத்து விட்டேன்!" என்று தழுதழுத்துச் சொன்னேன்.

"நீங்கள் அப்படிச் சொல்லக் கூடாது! இந்த விஷயத்தை உங்களிடம் சொல்ல இத்தனை நாளும் எனக்குத் தைரியம் வரவில்லை. நீங்கள்தான் என்னை மன்னிக்க வேண்டும்" என்றாள்.

என் இதயம் நெகிழ்ந்தது. இந்தப் பெண்ணுள்ளம்தான் எவ்வளவு சிறந்தது! விலை மதிப்பற்ற மாணிக்கங்களின் சுரங்கமாக அல்லவா இது தென்படுகிறது!

எனக்கு வெறும் உபசார வார்த்தைகளில் நம்பிக்கையில்லை. அவளுடைய இறந்த காதலனான கண்ணனின் ஆத்மா சாந்தி யடைய என்ன செய்வது?

"பத்மா! கண்ணைத் துடைத்துக் கொள். அந்தக் கண்ணன் ஆத்மா திருப்தி யடைய நீ ஒன்று செய்ய வேண்டும்" என்றேன்.

அவளும் கொஞ்சம் முகம் மலர, "என்ன?" என்று கேட்டாள்.

"தாழம்பூவைத் தலையில் வைத்துக் கொள். நீ ஒன்றுக்கும் பயப்பட வேண்டாம். கண்ணன் உயிருடன் இருந்திருந்தால் எப்படியோ! இறந்தவனுக்காக நான் ஏன் பொறாமைப்பட வேண்டும்?" என்று சொல்லிக் கொண்டே, ஓர் இதழை நானே எடுத்துச் சரியாய்க் கத்தரித்து, நாலாய் மடித்து அவள் பின்னலின் மேல் இரண்டு மயிர்க் கற்றையை இழுத்து உள்ளே செருகினேன்.

* * *

கொஞ்ச நேரத்துக்கெல்லாம் நாங்கள் இருவரும் மோட்டாரில் குறிப்பிட்ட நோக்கம் எதுவும் இன்றி எங்கேயோ போய்க்கொண்டிருந்தோம்.

குளிர்ந்த காற்று உடலில் பட்டுத் தளர்ந்த உள்ளங்களைத் தடவிக் கொடுத்துக் கொண்டிருந்தது.

அப்பொழுது மணி மாலை ஏழு!




பிரமுகர் :— என்ன ஸ்வாமிகளே! அந்த வித்வான் ஏன் இப்படி காட்டுக்கத்தலாக் கத்தறார்?"

காரியதரிசி :— நம்ம சபாவுக்குப் பக்கத்திலே இந்த அகடிகளை யெல்லாம் கொண்டு வந்து போட்டிருக்கானே. அவர்கள் போடற சத்தத்தை அமுக்குவதற்காக இப்படி இவரும் கத்தவேண்டி யிருக்கிறது!

# என்னே *அவளது எழில்!
# அவள் பாண்ட்ஸ் உபயோகிக்கிறாள்!

உலகின்கண் எழில்மிக்க மங்கையர்கள் சிலர், பாண்ட்ஸையே உபயோகிக்கின்றனர்.

... உங்கள் வதனம் அதிக மழ மழப்புடன், அன்றலர்ந்த மலரென விளங்க வேண்டுமாயின் இன்றையிலிருந்தே இம்மெல்லிய, நறுமணங்கமழும் க்ரீம்கள் உபயோகித்து வாருங்கள்.

பாண்ட்ஸ்
இலைசரிமுறை




பாண்ட்ஸ் கோல்ட் க்ரீம்: தினம் இரண்டு வேளை விரல் நுனிகளால் கோல்ட் க்ரீம் மெதுவாகத் தடவி, முகத்தை செம்மையாகச் சுத்தம் செய்யுங்கள். பாண்ட்ஸ் டிஷ்யூவால் துடைத்துக் களையவும்.




பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம்: பின்பு வானிஷிங் க்ரீம் தடவுங்கள். அது சருமத்தினுள் மறைகிறது— சருமத்திற்கு பாதுகாப்பு அளிக்கிறது.




பாண்ட்ஸ் பௌடர்: பின்னர் வேண்டுமானால் கொஞ்சம் பௌடரும் தடவிக் கொள்ளுங்கள். முகம் பூவிதழ்போன்று மோகன காந்தியுடன் விளங்கும்.

*பாரதி: பளபளவென்ற கூந்தல் மோகனப் புன்னகை.. பூவிதழ் போன்று கோமள வதனம்...

# பாண்ட்ஸ் க்ரீம்ஸ்

வியாபார விவரங்களுக்கு:
எல். டி. ஸெய்மூர் & கோ. (இந்தியா) லிட்.
பம்பாய்—கல்கத்தா—கராச்சி—சென்னை.













No. 4

# சந்திரஹாரம்

ஆசிரியர்: பிரேம் சந்த்

மொழி பெயர்ப்பு: ரா. விழிநாதன்.



ரத்தன் பச்சாத்தாபப்படுவதற்கு அந்த ஓரிரண்டு விஷயங்கள் மட்டும்தானா இருந்தன? இன்னும் எத்தனையோ விஷயங்கள் இருந்தன. 'இந்த எட்டு வருஷத்துத் தாம்பத்திய வாழ்க்கையில், என் கணவருக்கு நான் என்ன சுகத்தை அளித்துவிட்டேன்? அவர் தினம் இரவு பன்னிரண்டு மணி வரை சட்டப் புத்தகங்களை வைத்துக் கொண்டு கண் விழித்தார். நான் ஆனந்தமாகப் படுத்துத் தூங்கினேன். மாலை நேரங்களில்கூட அவருக்கு ஒழிவதில்லை. கட்சிக்காரர்களுடன் வழக்கைப் பற்றிப் பேசத்தான் அவருக்குப் பொழுது சரியாயிருந்தது. நானோ 'பார்க்' எங்கே, கடைத்தெரு எங்கே, ஸினிமா எங்கே என்று கவலையற்று ஊர் சுற்றித் திரிந்து கொண்டிருந்தேன். அவரைப் பணம் சம்பாதிக்கும் ஒரு மெஷினாக நான் எண்ணிக் கொண்டிருந்தேனே தவிர, அவருக்கு ஏதாவது மரியாதை மட்டு வைத்திருந்தேனா? 'நான் அவரருகில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருக்கவேண்டும்' என்று அவர் எவ்வளவு ஆசைப்பட்டார்? ஆனால் என்றைக்காவது நான் அவரருகில் ஒரு நிமிஷமாவது உட்கார்ந்தால்தானே! 'பேயோ, பிசாசோ!' என்று அலறிப் புடைத்துக்கொண்டு ஓடுபவர்களைப் போல, அவர் கண்களில் படாமல் நான் ஓடித் திரிந்தேன். இதுவரை நான் அவருடைய உள்ளத்தை நெருங்கினதும் இல்லை; அன்புக் கண் கொண்டு பார்த்ததும் இல்லை. 'தகதக' வென்று ஜகஜ்ஜோதியாகப் பிரகாசிக்கும் பிறருடைய வீட்டைக் கண்டு நான் உள்ளூற ஆனந்தப் பட்டுக் கொண்டிருந்தேனே தவிர, நாமும் நம்முடைய வீட்டில் விளக்கேற்றி வைத்து நம் வீட்டையும் பிரகாசிக்கச் செய்ய முடியும் என்று கனவில்கூடச் சிந்தித்ததில்லை. உல்லாசமாகப் பொழுது போக்குவதைத் தவிர நான் வேறு எதுவும் அறியேன். சுகபோகமும் ஆனந்தமும்தான் எனக்கு வாழ்க்கையின் இரு குறிக்கோள்களாகத் தோன்றின. என் புண்பட்ட உள்ளத்துக்கு ஆறுதல் அளிப்பதிலேயே நான் கண்ணும் கருத்துமாயிருந்தேன். 'பழமும், பாலும், பாயஸமும் நமக்குக் கிடைக்கவில்லையே!' என்ற ஆத்திரத்தில், இருந்த கால் வயிற்றுக் கஞ்சியையும் அல்லவா நான் கால்களால் தட்டி உருட்டி விட்டேன்! —என்று ரத்தன் மிகவும் மனவருத்தமுற்றாள்.

ரத்தனுக்கு இன்றுதான், 'தன்னைப் பிரிந்து செல்லும் அந்த ஆத்மா தன்னிடம் அளவிலாப் பற்றுதல் கொண்டிருந்தது, சாகும் தறுவாயிலும் அது தன் நினைவாகவே செத்தது' என்ற விஷயம் விளங்கியது. என்ன இருந்தாலும் ரத்தனுக்குத் தன் வாழ்க்கையில் சிறிது பற்றுதல், ஆனந்தம், உற்சாகம் முதலியவை இருந்தன என்று சொல்லலாம். ஆனால் அவர் தன் வாழ்க்கையில் என்ன சுகத்தைக் கண்டுவிட்டார்? 'உண்டு களித்திருந்தோம்' என்ற சுகமோ, 'வேடிக்கை விளையாட்டுக்களில் லயித்திருந்தோம்' என்ற திருப்தியோ அவருடைய ஆத்மாவுக்கு ஏது? 'என் கடன் பணி செய்து கிடப்பதே!' என்று கடைசி மூச்சு வரை யல்லவா, அவர் கடமையில் கண்ணும் கருத்துமாக இருந்தார்? அவருடைய வாழ்க்கையே ஒரு கடுந்தவமாக அல்லவா முடிந்துவிட்டது? ரத்தன் மனது வைத்திருந்தால் அவருடைய வாழ்க்கையை இன்ப மயமானதாக ஆக்கியிருக்க முடியாதா? கடமையையே கட்டிக் காத்த அந்த ஆத்மாவுக்கு ஒரு கணமாவது அவள் மன நிம்மதி அளித்திருக்க முடியாதா? சுடர் நட்டிக்கொண்டு எரியும் தீபம் அணையும் தறுவாயில் இருந்த பொழுதிலும், இன்னும் கொஞ்ச நேரம் பிரகாசிக்காது என்று எவராலாவது தீர்மானமாகச் சொல்லிவிட முடியுமா? 'இவரைக் கட்டிக் கொண்டு மாரடிக்க வேண்டியிருக்கிறதே!' என்று

அவளுடைய அந்தராத்மா எப்பொழுதுமே அவருக்கு எதிராகச் சதி செய்து வந்தது. அந்தக் குற்றங்கள் முழுவதும் அவளுடையதுதானா?

என் ஏழைத் தாய் தந்தையர் என்னை இன்னும் கேடுகெட்ட நிலைமையில் வைத்திருந்தால் யார் என்ன சொல்ல முடியும்? வாலிபர்கள் எல்லோருமே நேர்மையானவர்களாகவும், நல்லவர்களாகவும் இருந்து விடுவார்கள் என்பது என்ன நிச்சயம்? அவர்களிலும் எத்தனையோ விபசாரிகள், முன் கோபிகள், குடிகாரர்கள் இல்லையா? அம்மாதிரியானவர்கள் யாருடனாவது நான் வாழ்க்கை நடத்தும்படி நேரிட்டிருந்தால், இன்னும் என்னென்ன கஷ்டங்களையெல்லாம் அனுபவித்துக் கொண்டிருப்பேனோ, யார் கண்டது?

இப்படியெல்லாம் எண்ணங்கள் ஓடவே, ரத்னம் மனத்துள் தன்னைத்தானே நிந்தித்துக் கொண்டாள். பிறகு, கணவரின் சில்லிட்ட காலடிகளில் தலையைப் புதைத்துக் கொண்டு அவள் விம்மி விம்மி அழலானாள். எவ்வளவோ நாட்களாக அவள் தன் கணவர்மீது கொண்டிருந்த மனக்கசப்பும், அவர் கேட்ட கேள்விகளுக்கெல்லாம் தான் எரிந்து விழுந்துகொண்டு சொன்ன பதில்களும் நினைவுக்கு வந்து, அவளுடைய உள்ளத்தைத் தேள் கொட்டுவதுபோலக் கொட்டின. 'ஐயோ! கடலைப் போன்ற கம்பீரம் வாய்ந்த அந்த அறிஞரிடம் அல்லவா நான் இப்படியெல்லாம் தாறுமாறாக நடந்துகொண்டு விட்டேன்? அவருடைய உள்ளத்தில்தான் என்ன கனிவு! என்ன பெருந்தன்மை! ஆகா, என் கையால் ஒரு வெற்றிலை மடித்துக் கொடுத்துவிட்டால் போதும், அவருக்குச் சந்தோஷம் தலை கால் புரியாது! இரண்டொரு வார்த்தைகள் நான் சிரித்துப் பேசிவிட்டால் அவருக்குப் பெருமிதம் தாங்குவதில்லை!

நடந்து போன விஷயங்களையெல்லாம் எண்ண எண்ண, ரத்னத்துக்கு இதயமே வெடித்து விடும் போலாகி விட்டது. அவருடைய காலடிகளில் தலையைப் புதைத்துக் கொண்டிருந்த அவளுக்குத் தன் உயிரும் இதே கணம், இதே நிலைமையில் உடலை விட்டுப் பிரிந்து போய் விடக் கூடாதா என்று தோன்றிற்று. அவருடைய கால் தூசிகளை இன்று தன் தலையில் ஏற்றுக் கொள்ளும்பொழுது, அவளுடைய உள்ளத்தில் அன்பு பெருக்கெடுத்து ஓடத் தொடங்கியது. அந்தச் சமயம் அவளுடைய உள்ளம் அவர் பொருட்டு எதையுமே தியாகம் செய்யத் தயாராகி விட்டது. மரணத்தின் திவ்ய ஜோதிக் கெதிரே, அவளுடைய உள்ளத்தில் இவ்வளவு நாட்களாகக் குடிகொண்டிருந்த அழுக்காறு, கெட்ட எண்ணங்கள், மனக் கசப்பு அனைத்தும் அறவே ஒழிந்து விட்டன. அவள் வக்கீலை வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தாள்.

வக்கீலின் கண்கள் திறந்தது திறந்த படியே இருந்தன. முகத்தில் எவ்விதமான உணர்ச்சியும் காணப்படவில்லை. ஏனெனில், 'யார் அழுதாலும் கவலையில்லை; யார் சிரித்தாலும் தனக்கு மகிழ்ச்சியில்லை' என்ற நிலைமையை அவர் அப்போது அடைந்து விட்டார்.

சம்பு, ஒரு உத்தரணியில் கங்கை நீரை எடுத்து அவருடைய வாயில் ஊற்றினான். இன்று அவர் தடுக்கவேயில்லை. குருட்டுப் பழக்க வழக்கங்களுக்கும், மூட சம்பிரதாயங்களுக்கும் ஜன்ம சத்துருவான அவர் இப்பொழுது வாய் திறக்கவில்லை. அதனால் அவருக்குத் தருமத்தில் நம்பிக்கை ஏற்பட்டு விட்டது என்று சொல்லி விடுவதற்கில்லை. அவருடைய இச்சைகள் எல்லாம் அடங்கி விட்டன. அதனால்தான் அவர் பேசாமல் இருந்தார். இந்தச் சமயத்தில் விஷத்தைக் கொடுத்தாலும் அவர் அதே அலட்சியத்துடன் அதை அருந்தியிருப்பார்!

மனித வாழ்க்கையின் மிகப் பெரிய சம்பவம் எவ்வளவு அமைதியாகக் கழிந்து விடுகிறது, பாருங்கள்! மனிதனே உலகத்துக்கே மகத்தான ஒரு அம்சம். அவன் இல்லையேல் உலகம் இல்லை. மனிதன் பேரிரைச்சல் புரியும் ஒரு பேராசைக் கடல்; முயற்சிகளில் வற்றாத களஞ்சியம்; அன்பு — துவேஷம், இன்பம் — துன்பம், சுகம்—துக்கம் முதலியவைகள் களி நடம் புரியும் விளையாட்டுப் பூமி; புத்தி — பலம் இவற்றின் அரங்கமேடை. அப்படிப்பட்ட மனிதன் எப்படி, எங்கே, எப்பொழுது மறைகிறான் என்ற ரகசியம் யாருக்குமே புரிவதில்லை. ஒரு விக்கலோ, பெருமூச்சோ கிடையாது. ஏன் சாதாரண சிறு மூச்சுக்கூடக் கிடையாது! கடல் அலைகள் எங்கே போய் முடிகின்றன என்று யாராவது சொல்ல முடியுமா? அதில் எழும் பேரிரைச்சல் எங்கே போய்க் கலக்கிறது என்றுதான் யாருக்காவது தெரியுமா? மனுஷ்ய வாழ்க்கையை அந்த அலைக்கும் பேரிரைச்சலுக்கும் சமானமாகச் சொல்லுவதைத் தவிர வேறென்ன சொல்ல

முடியும்? மனிதவாழ்க்கையின் முடிவும் அதே போன்ற அமைதியுடன், கண்களுக்குப் புலப்படாமல் ஏற்பட்டால் அதில் ஆச்சரியப் படுவதற்கு என்ன இருக்கிறது? பஞ்ச பூதங்களில் நம்பிக்கையுள்ளவர்கள் 'என்ன, பிராணன் போய்விட்டதா?' என்று கேட்கிறார்கள். 'அத்வைதம்' என்னும் விஞ்ஞானத்தை உபாஸிப்பவன், 'ஒரு சிறு ஒளி பிரிந்து செல்லுகிறது' என்கிறான். கேள்வி ஞானம் உடைய பாமர மக்கள், 'கண்களின் வழியே பிராணன் சென்றது; வாயின் வழியே சென்றது; காதுகளின் வழியே சென்றது' என்கிறார்கள். அலைகள் ஓயும் தறுவாயில் பிரகாசிக்கின்றனவா? பேரிரைச்சல் காற்றோடு லயித்துக் கலக்கும்பொழுது உருவம் பெறுகின்றதா?' என்று யாராவது அவர்களிடம் கேட்டுப் பாருங்கள்: பதில் சொல்லத் தெரியாமல் விழிப்பார்கள்!

வாழ்க்கை முடிவற்றது; மரணம் என்பது ஒரு இளைப்பாறும் கட்டமே யொழிய வேறொன்றுமில்லை. மரணத்துடன் வாழ்க்கைப் பிரயாணம் முடிந்து விடுவதில்லை; மரணத்துக்குப் பின்னர்தான் வாழ்க்கைப் பிரயாணம் மறுமுறையும் புதிதாக ஆரம்பமாகிறது.



அப்பப்பா! எத்தனை பெரிய மாறுதல்! கொசுக் கடியைக்கூடப் பொறுக்க முடியாமல் இருந்த மனிதன், மண்ணில் குழி தோண்டிப் புதைத்தாலும் சரி, நெருப்பி விட்டுக் கொள்ளி வைத்தாலும் சரி, கொஞ்சங்கூட முகம் சிணுங்குவதில்லை. எப்படித்தான் இவ்வளவு சீக்கிரம் இந்த மாறுதலை அடைந்து விடுகிறானோ!

சம்பு வக்கீலை ஒரு முறை நன்றாகக் கவனித்து உற்றுப்பார்த்துவிட்டு, "அம்மா, வாருங்கள்! கட்டிலிலிருந்து இறக்கிப் போடுவோம். ஐயா நம்மை விட்டுவிட்டுப் போய் விட்டாருங்க!" என்றான்.

இதைச் சொல்லியவாறே அவன் தன் இரண்டு கைகளாலும் கண்களைப் பொத்திக்கொண்டு தரையில் உட்கார்ந்து விசித்து விசித்து அழலானான்.

ரத்தன் இன்னும் வைத்தியரை எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள்! சம்புவின் வாயிலிருந்து வெளிவந்த அந்தச் சொற்களைக் கேட்டதும், அவளுக்குப் பூமியே 'தட்டா மாலை' சுற்றுவது போலிருந்தது. அவள் எழுந்து கணவரின் மார்பின் மீது கை வைத்துப் பார்த்தாள். இந்த அறுபது வருஷ காலமாக ஓயாமல், ஒழியாமல் சலிப்பின்றி ஓடிக்கொண்டிருந்த அவருடைய இதயம் சலித்துப் போய் இளைப்பாறத் தொடங்கிவிட்டது. அதற்கப்புறம் அவருடைய நெற்றியில் கை வைத்துப் பார்க்கக்கூட அவளுக்குத் துணிவு ஏற்படவில்லை. அந்தத் தேகத்தைத் தொடுவதற்கே ஒரு கூச்சம்! அந்த மரித்த முகத்தைப் பார்ப்பதற்கே ஒரு கோரம்! சிறிது நேரத்துக்கு முன்பு யாருடைய காலடிகளில் தலையைப் புதைத்துக் கொண்டு, அவள் அழுதாளோ, அவரைத் தொடுவது என்றாலே இப்பொழுது அவளுக்கு ஒரு அருவருப்பு ஏற்படத் தொடங்கிவிட்டது. 'வாழ்க்கைக் கயிறு இவ்வளவு மெல்லியது' என்று அவளுக்கு இன்றுவரை தெரியவே தெரியாது. 'மரணம்' என்று ஒன்று இருப்பதாகக் கூட அவளுடைய மனத்தில் இன்று வரை ஒரு எண்ணம் எழுந்ததில்லை. அந்த 'மரணம்' அவள் கண்களுக்கெதிரிலேயே அவரைச் சூறையாடி விட்டது!

ஒரு கணம் கழித்து மறுபடியும் "என்ன அம்மா, பார்க்கிறீங்க! நடப்பது நடந்து விட்டது. இனி வருத்தப்பட்டு என்ன பிரயோசனமுங்க? கட்டிலிலிருந்து கீழே இறக்கிப் போட வேண்டியது தானுங்க!" என்றான் சம்பு.

அவன் கால் பக்கத்தைப் பிடித்தான்; ரத்தன் தலைப் பக்கத்தைப் பிடித்தாள். இருவருமாகச் சேர்ந்து பிணத்தைக் கீழே இறக்கிப் போட்டார்கள். ரத்தன் பிணத்துக் கருகிலேயே உட்கார்ந்துகொண்டு அழு ஆரம்பித்து விட்டாள். 'உலகத்திலே நாம் நாதி இல்லாதவளாக ஆகிவிட்டோமே!' என்ற வருத்தத்தினால் அவள் அழவில்லை. 'கணவனுக்குச் செய்ய வேண்டிய பணியை நாம் சரிவரச் செய்ய முடியாமற் போய் விட்டதே!' என்ற வருத்தத்தினால்தான் அவள் அப்படி அழலானாள்.

அதே சமயம் கார் வரும் சத்தம் கேட்டது. சிறிது நேரத்துக்கெல்லாம் வைத்தியரும் காரிலிருந்து இறங்கினார்.

ரத்தனுடைய உள்ளத்தின் ஒரு மூலையில், அணையும் நம்பிக்கைத் தீயில், ஒரே ஒரு பொறி மட்டும் அணையாமல் இருந்தது போலும். ஆகவே, அவள் உடனே கண்களைத் துடைத்துக் கொண்டாள்; புடவைத் தலைப்பைச் சரி செய்து கொண்டாள்; சிதறிய கூந்தலைக் கோதிவிட்டுக் கொண்டாள்; பிறகு எழுந்து நின்று, வெகு ஆதுரத்துடன் வாசற் பக்கத்தை நோக்கலானாள். உஷாதேவி அருணோதயத்தின் வரவைத் தெரிவிக்கும்பொருட்டு, தன் செந்நிறக் கிரணங்களைக் கொண்டு ஆகாயத்தை அலங்கரிக்கலானாள். வக்கீலுடைய ஆத்மாவின் புது வாழ்க்கைக்கும் அதுதான் அருணோதயமோ?

## முப்பத்தோராம் அத்தியாயம்

## மணி பூஷண்

அன்றைய தினமே பிணத்தைக் காசிக்குக் கொண்டு வந்து விட்டார்கள். காசியில்தான் வக்கீலுக்குத் தகனக் கிரியை நடந்தது. அவருக்குத் தமையன் பிள்ளை ஒருவன் மால்வாவில் இருந்தான். அவனுக்குத் தந்தி கொடுத்து வரவழைத்தார்கள். அவன்தான் வக்கீலுக்கு உத்தரக்கிரியைகள் செய்தான். ரத்தனுக்குச் சிதைக் காட்சியை நினைத்தாலே மயிர்க் கூச்சமெடுத்தது. ஆகையால், அவள் கொள்ளி

லைக்கக்கூட மயானத்துக்குப் போக வில்லை.

பத்மா பெரும்பாலும் தன் நேரத்தை ரத்தனுடனேயே கழித்து வந்தாள். துயரத்தில் மூழ்கி யிருந்த ரத்தனுக்கு வீட்டு நினைவோ, சாப்பாட்டு நினைவோ எழுவதே யில்லை. எப்பொழுது பார்த்தாலும் அவள் காலஞ்சென்ற வக்கீலின் நினைவில் கண்ணீரும் கம்பலையுமாக இருக்கலானாள். அழுது அழுது அவளுடைய கண்கள்கூட வீங்கிப் போயின. 'கணவனுக்குச் செய்ய வேண்டிய பணியில் நூற்றில் ஒரு பங்குகூடத் தான் செய்யவில்லையே!'' என்ற எண்ணம் அவளுடைய மனதை அரம் கொண்டு அறுத்தது. கடமையை மறந்து மனக் கசப்புடன் கணவரிடம் தான் நடந்து கொண்டதையும், ஆடை அலங்காரங்களில் மூழ்கிக் கணவரைத் தான் அலட்சியம் செய்ததையும் எண்ணி எண்ணி அவள் மிகவும் மனம் பொருமினாள். வக்கீலின் நல்ல குணங்களை வாயாரப் புகழ்ந்து அவள் தன்னுடைய ஆத்மாவைத் திருப்தி செய்து கொள்ள முயன்றாள்.

வக்கீலின் தமையன் பிள்ளைக்கு மணிபூஷண் என்று பெயர். அவன் 'கலகல' வென்று பேசும் இனிய சுபாவம் படைத்தவன்; எப்பொழுது பார்த்தாலும் சிரித்த முகம்; காரியத்தில் கண்ணுயிருப்பான்; வந்த ஒரு மாதத்துக்குள் அவன் ஏராளமான சிநேகிதர்களைச் சம்பாதித்துக் கொண்டு விட்டான். அந்த நகரத்தில் வக்கீல் இந்துபூஷணுக்குத் தெரிந்திருந்த வக்கீல்களையும், பெரும் புள்ளிகளையும் அவன் வெகு சீக்கிரமே தெரிந்து கொண்டு விட்டான். அவர்களுடன் சங்கோசமின்றித் தாராளமாகப் பேசும் வகையில் மிகவும் நெருங்கிப் பழகவும் ஆரம்பித்து விட்டான். கொஞ்ச நாட்கள் சென்றதும் ரத்தனுக்குக் கூடத் தெரியாமல் வக்கீலின் பெயரில் இருந்த பாங்கிக் கணக்கைத் தன் பெயருக்கு மாற்றிக் கொண்டு 'லேவா தேவி' நடத்த ஆரம்பித்து விட்டான். அலகாபாத் பாங்கியில் வக்கீல் இருபதினாயிரம் ரூபாய் போட்டு வைத்திருந்தார். அதையும் அவன் மெதுவாகத் தன் வசப்படுத்திக் கொண்டு விட்டான். இன்னும் கொஞ்ச நாட்கள் சென்றதும், வக்கீல் வீடுகளின் வாடகையைக் கூடத் தானே வசூலித்து எடுத்துக் கொள்ளலானான். அவன் ரத்தனை ஒரு பொருட்டாக மதிக்காமல், கிராமத்து நிலபுலன்களின் வரவுசெலவையும் தன் ஆதிக்கியத்துக்கு உட்படுத்திக்கொண்டு விட்டான்.

சம்பு ஒரு நாள் ரத்தனிடம் சென்று, "அம்மா, போனவரு போயிட்டாரு. இன்னும் அழுது என்ன பிரயோசனம், அம்மா? அழுதால் போனவரு திரும்பி வந்துவிடப் போறாரா? அதை மறந்து இனிமேல் வீடு வாசலையும் கொஞ்சம் கவனித்துக் கொள்ளுங்க, அம்மா! 'சின்ன ஐயா பாங்கியிலிருக்கும் பணத்தையெல்லாம் தன் பெயருக்கு மாற்றிக் கொண்டு விட்டாரு' என்று வேறு கேள்விப்படுகிறேன்!'' என்றான்.

ரத்தன் அவனை ஒரு முறை கடுமை தாண்டவமாடும் கோபக் கண்களுடன் உற்றுப் பார்த்தாள். அதற்கப்புறம் அவனுக்கு வாய் திறக்கத் துணிவு ஏற்படவில்லை. பேசாமல் நகர்ந்து விட்டான்.

மணிபூஷண் அன்று சாயந்திரமே சம்புவை வேலையிலிருந்து நீக்கிவிட்டான். அதுவும் சாதாரணமாக நீக்கிவிடவில்லை. 'ரத்தன் ஒன்றும் வாய் திறக்க முடியாமல் இருக்க வேண்டுமே' என்பதற்காக, அவன் சம்புவுக்குத் திருட்டுப் பட்டம் கட்டி வேலையிலிருந்து நீக்கினான். முப்பது வருஷ காலம் எசமான விசுவாசத்துடன் வேலை பார்த்த சம்புவுக்கு அந்தக் கதி நேர்ந்தது!

அடுத்தபடியாகச் சமையற்காரன் ஒருவன்தான் பாக்கியிருந்தான். மணிபூஷண் அவனுடைய பலவீனத்தை அறிந்து, வேண்டிய மட்டும் அவனுக்கு லாகிரிப் பொருள்களை வாங்கிக் கொடுத்துத் தன் வசப்படுத்திக் கொண்டு விட்டான். ஆகையால் சமையற்காரன் எதற்கெடுத்தாலும் மணிபூஷண் பக்கமே சாயத் தொடங்கிவிட்டான். அவன் வீட்டு வேலைக்காரியிடம், "சின்ன எசமானருக்கு ரொம்ப ரொம்பத் தங்கமான மனசு. ஏதாவது சாமான் வாங்கி வரக் காசு கொடுத்தால், 'எவ்வளவுக்கு வாங்கி வந்தாய்? என்ன விலை? இன்னும் பாக்கி எவ்வளவு இருக்கிறது?' என்றெல்லாம் அவர் கணக்குக் கேட்பதே யில்லை. 'பாக்கியை நீயே வைத்துக் கொள்' என்று சொல்லிவிடுகிறார். அவருக்குக் கை ரொம்பத் தாராளம். என்ன இருந்தாலும் பெரிய வீட்டுப் பிள்ளை யென்றால் பெரிய வீட்டுப் பிள்ளைதான்! அதன் பிறவிக் குணம் எங்கே போகும்? ஆனால் நம் எசமானியம்மாள் இருக்கிறார்களே, ஒரு தம்பிடி கூட விடமாட்டார்கள். கணக்குப் பார்த்து வாங்கி விடுவார்கள். இவர் அப்படியெல்லாம்

இல்லை!” என்று வாயார மணிபூஷணைப் பற்றிப் புகழ்வான்.

மணிபூஷணன் அவனுக்கு முன்னாலேயே வேலைக்காரிக்கும் ‘இரண்டு, ஒன்று’ என்று ரூபாய்கள் கொடுத்து, அவளுக்கும் வாய்ப் பூட்டு பலமாகப் போட்டுவிட்டான்.

தனக்கு எதிராக இப்படியெல்லாம் சதி நடக்கிறது என்ற விஷயம் ரத்தனுக்குத் தெரியவேயில்லை.

மணிபூஷணன் ஒரு நாள் ரத்தனிடம் வந்து, “சின்னம்மா, இங்கே நாம் வீணில் செலவழித்துக்கொண்டு இருப்பானேன்? ஊருக்குப் போய்விட்டால் என்ன? இங்கே தனியாக இருக்க உங்களுக்கும் மனம் கட்டோடு பிடிக்காது. அங்கே உங்கள் மாட்டுப் பெண் இருக்கிறாள், உங்களுடைய சௌகரியங்களைக் கவனித்துக் கொள்ளுவதற்கு. குழந்தை - குட்டிகள் இருக்குமிடத்தில் இருந்தால் உங்களுக்கும் சுலபமாகப் பொழுது போய்விடும். இங்கு ஒரு குடும்பமும், அங்கு ஒரு குடும்பமும் நடந்தால் செலவு வேறு இரட்டித்துவிடும். ஒரே குடும்பமாயிருந்தால் செலவாவது குறையும் அல்லவா? இன்னுமொன்று, நீங்கள் ‘சரி’ என்று சொன்னால், இந்தப்பங்களாவை விற்று விடலாம் என்று இருக்கிறேன். இந்தக் காலத்தில் இது நல்ல விலைக்குப் போய் விடும். உங்கள் அபிப்பிராயம் என்ன?” என்று கேட்டான்.

ரத்தன் அப்பொழுதுதான் மூர்ச்சை தெளிந்து விழித்தவள்போலத் திடுக்குற்றாள். நல்ல தூக்கத்தில் இருப்பவனைத் தட்டி எழுப்பினால், குறைத் தூக்கத்தில் எழுந்து பேந்தப் பேந்த விழிப்பானே, அதுபோன்ற கண்களுடன் அவள் மணிபூஷணைப் பார்த்துக் கொண்டே, “என்ன, என்னிடமா சொல்லுகிறாய்? என்ன சொன்னாய்?” என்று பதில் கேள்வி கேட்டாள்!

“வீணில் செலவு செய்துகொண்டு இந்த ஊரில் உட்கார்ந்திருப்பானேன்? ‘ஊருக்குப் போய் விட்டால் என்ன?’ என்று கேட்டேன்!”

ரத்தன் ஒருவித அலட்சியத்துடன், “நன்றாகத்தானிருக்கும்!” என்று பதில் சொன்னாள்.

“ஆமாம், சித்தப்பா ஏதாவது உயில்-கியில் எழுதி வைத்திருக்கிறாரா? வைத்திருந்தால் காட்டுங்கள், பார்க்கலாம். அவருடைய விருப்பத்தை நிறைவேற்றி வைக்க வேண்டியது நம் கடமையல்லவா?” என்றான் மணிபூஷணன்.

ரத்தன் தனக்கும் உலக விஷயங்களுக்கும் எவ்விதச் சம்பந்தமும் இல்லாதவள் போல ஆகாயத்தை அண்ணாந்து பார்த்த வண்ணம், “அவர் உயில் ஒன்றும் எழுதி வைக்கவில்லை. உயில் எதற்கு?” என்றாள்.

“உயில் எழுதி வைக்காமலா இருந்திருப்பார்? எதேயாவது எழுதி வைத்திருந்தால்......”

“எனக்கு ஒன்றும் தெரியாது. அப்படி உயில் எழுதி வைப்பதாக இன்று வரை அவர் என்னிடம் பிரஸ்தாபித்ததும் இல்லை” என்றாள் ரத்தன்.

மணிபூஷணன் உள்ளூற மனம் பூரித்தவனாய், “அவருடைய ஞாபகார்த்தமாக ஏதாவது செய்ய வேண்டும் என்பது என் அந்தரங்க ஆசை!” என்றான்.

ரத்தன் ஆவலுடன், “ஆமாம், ஆமாம். கட்டாயம் அவருடைய ஞாபகார்த்தமாக ஏதாவது செய்யத்தான் வேண்டும்!” என்றாள்.

“கிராமத்து நிலபுலன்களின் மூலமாக வருஷம் மூவாயிரத்துக்குக் குறைவில்லாமல் வரும்படி வருகிறது உங்களுக்குத் தெரிந்திருக்கும் என்று நினைக்கிறேன். அவர் கணக்கு நோட்டைப் புரட்டிப் பார்த்ததில் மாதம் இருநூறு இருநூற்றைம்பதுக்குக் குறையாமல் அவர் தான தருமங்கள் செய்து வந்திருக்கிறார் என்றும் தெரிய வருகிறது. என்னைக் கேட்டால், நிலபுலன்களிலிருந்து வரும் அந்த வரும்படியைத் தான தருமங்களுக்கு மாமூலாக்கிவிட வேண்டும் என்று சொல்லுவேன். என்ன, நான் சொல்லுவது நியாயம்தானே?” என்றான் மணிபூஷணன்.

ரத்தன் மிகவும் மகிழ்ச்சியுடன், “நியாயம் தான்! நீ சொல்லுவதில் என்ன தப்பு இருக்கிறது?” என்றாள்.

“சரி, அப்படியானால் கிராமத்து வரும்படியைத் தான தருமத்துக்கென்று ஒதுக்கி விடுவோம். வீட்டு வாடகை மூலம் மாதம் இருநூறு ரூபாய்க்குக் குறையாமல் கிடைக்கிறது. அதைக் கொண்டு அவருடைய பெயரில் ஒரு சம்ஸ்கிருத பாடசாலை ஏற்படுத்திவிடலாம் என்று எண்ணுகிறேன்...”

“அதுவும் ரொம்ப நியாயம்தான்!”

“அப்புறம் இந்தப் பங்களாவை விற்று விட்டு, அந்த ரூபாயைப் பாங்கியில் போட்டு வைக்கலாம் என்பது என்னுடைய உத்தேசம்.”

“ஆமாம், அதுவும் நியாயம்தான்! எனக்கு எதற்கு இனிமேல் அதிகப் பணம், காசு......?”

"உங்களுக்கு வேண்டியது செய்ய நாங்கள் காத்திருக்கிறோம். யானையைக் கட்டித் தீனி போடுவது போல இந்தக் காரை வைத்துக்கொண்டு தீனி போடுவானேன்? இதையும் விற்று விடலாமோ என்று எண்ணுகிறேன்."

"அதற்கு இப்பொழுதே என்ன அவசரம்? பாங்கியில் இன்னும் பணம் இருக்கிறதோ, இல்லையோ?"

"பாங்கியில் பணம் இருந்தது வாஸ்தவம் தான். இருந்தாலும் மாதாமாதம் அதிலிருந்து எடுத்துச் செலவு நடந்துகொண்டு வருகிறதே, இல்லையோ? இன்னும் ஐநூறு, அறுநூறு ரூபாய் இருந்தால் பெரிய காரியம். இந்த ஊரில் என்ன செலவு என்கிறீர்கள்? எதற்கெடுத்தாலும் பணம்! பணமில்லாமல் இந்த ஊரில் ஒரு நிமிஷம் கூட இருக்க முடியாது. இந்த ஊரில் இரண்டொரு மாதம் இருந்தாலே அரசனும் ஆண்டியாகிவிட வேண்டியதுதான். அதற்காகத்தான் காரை விற்றுவிடலாமோ என்று அபிப்பிராயப்படுகிறேன்" என்றான் மணிபூஷண்.

கடைசியில் அதற்கும் ரத்தன் 'சரி' என்ற பதிலையேதான் அளித்தான். சில சமயம் மனிதன் எந்தக் காரியத்துக்கும் தன் மூளையைச் செலவிடாமல் 'சரி, சரி' என்று தலையை ஆட்டி வைக்கிறான் அல்லவா? அதே போன்ற பலவீனமான மனோ நிலைமையை அச்சமயம் ரத்தன் அடைந்திருந்தான். போதும் போதாக் குறைக்குக் காரியத்தில் கண்ணும் கருத்துமாயிருந்த மணிபூஷணனுடைய கெட்டிக்காரத்தனமான பேச்சு அவனுடைய உள்ளத்தைக் கவர்ந்து விட்டது. ரத்தன் தன்னிடம் அனுதாபம் காட்டுபவர்கள் போல நடிக்கும் ஆசாமிகளைக்கூடத் தனக்கு மிகவும் வேண்டியவர்கள் என்று கருதும் நிலைமையை அடைந்திருந்தான். துயரமும் மனக் கிலேசமும் அவனுடைய உள்ளத்தை மெழுகுபோல ஆக்கியிருந்தன. உள்ளத்திலிருந்த அழுக்காறும் வேற்றுமையும் எரிந்து சாம்பலாகி உள்ளம் தெள்ளத் தெளிந்து விட்டது. ஆகவே, அவன் அன்னியனையும் தன்னவன் என்று எண்ணலானான். அவனுக்கு யார் மீதும் சந்தேகமோ, சம்சயமோ எழவேயில்லை. ஒரு திருடன் வந்து அவனுக்கெதிரிலேயே அவனுடைய சொத்து அனைத்தையும் அபகரித்துக் கொண்டு போனால்கூட அவன் கூச்சலிட்டிருக்க மாட்டான். அம்மாதிரியான மனோ நிலையில்தான் ரத்தன் அப்பொழுது இருந்தான்! (தொடரும்)

# காலக்ஷேபம்

## அப்படிச் சொல்லும்!

தகப்பன் (பெருமையாக):—நம்ம பையன் சித்திரம் கற்றுக்கொள்வதற்காகப் பம்பாய்க்குப் போயிருந்தான்; உங்களுக்குத் தெரியுமல்லவா? இந்த 'சூரிய அஸ்தமனப் படம்' அவன் எழுதியதுதான்! எப்படியிருக்கிறது?

நண்பர்:—அப்படிச் சொல்லுங்கள்! படத்தைப் பார்த்ததும் நம் தேசத்தில் இந்த மாதிரி சூரிய அஸ்தமனம் கிடையாதே என்று யோசித்தேன்!

★

## வேலை முறை!

ஹோட்டலில் சாப்பிடுபவர்:—ஐயா, விக்குகிறது. மாரடைத்துக் கொள்ளுகிறது. ஒரு டம்ளர் ஜலம் கொடும்!

ஹோட்டல் சர்வர்:—இது நான் ஸப்ளை செய்யும் மேஜையல்ல, ஸார்!

★

## டாக்டரின் யோசனை!

"என்னுடைய குழந்தை பௌண்டன் பேனாவை விழுங்கி விட்டது. உடனே வாருங்கள்!" என்றார் ஒருவர் டெலிபோனில்.

டாக்டர்:—இதோ வருகிறேன்; இன்னும் பத்து நிமிஷத்தில் வந்து விடுகிறேன்!

கூப்பிட்டவர்:—நீங்கள் வரும் வரையில் நான் என்ன செய்யட்டும்?

டாக்டர் (எரிச்சலுடன்):—பென்ஸிலால் எழுதிக் கொண்டிரும்!

★

## தெரிந்த விஷயம்!

எஜமான் (தமது மோட்டார் டிரைவரின் மகனைப் பார்த்து):—அடே, பயலே! நான் யார் தெரியுமா?

பையன்:—தெரியும், ஸார்! எங்கப்பா மோட்டாரில் சவாரி செய்கிறவர், ஸார்!

★

## நல்ல குறிப்பு!

ஒரு பிரசங்கி தம் பிரசங்கத்தை முடித்துவிட்டுக் கூட்டத்தில் சிலர் எழுதி யனுப்பியிருந்த கேள்விகளுக்கெல்லாம் பதில் சொல்லிக் கொண்டிருந்தார்.

நடுவில் ஒருவர் எழுந்து வந்து ஒரு துண்டுக் காகிதத்தைப் பிரசங்கியிடம் கொடுத்துவிட்டுப் பக்கத்திலேயே நின்றார்.

பிரசங்கி அந்தத் துண்டுக் காகிதத்தைப் பின்வருமாறு படித்தார்:—

"ஐயா, பிரசங்கியாரே! உங்கள் கோட்டின் முதுகுப் புறம் கிழிந்திருக்கிறது. அதனால் நீங்கள் ஷர்ட் போடவில்லை என்பது தெரிகிறது. இந்தத் துண்டுக் காகிதத்தைக் கொண்டு வரும் அன்பரிடமிருந்து அங்கவஸ்திரத்தை வாங்கிப் போர்த்திக்கொண்டு பேசுங்கள்!"



# Policy

WORLD WIDE POLICY NO.558

வருஷக்கணக்கில் டிவிடெண்டு

(இலாபம்) கொடுக்கக் கூடியது.

# தங்க முனை சேமிப்பு

. . . ஏனென்றால் மென்ட்மோர் ஆட்டோப்ளோ பேனா இந்தியாவின் சீதோஷ்ண நிலையைத் தாங்கக்கூடிய பொருள்களால் விசேஷமாக செய்யப்பட்டது. ட்ராப் - பில்லிங், லீவர், ஸ்டட் - பில்லிங் முதலிய மாடல்களில் கிடைக்கிறது. அதனுடைய கெட்டியான நிப் 14 காரட் தங்கத்தால் செய்யப்பட்டது. ஆஸ்மி இரிடியத்தில் தோய்க்கப்பட்ட முனையோடுகூடியது. ஒவ்வொரு பேனா குழலின்மேலும் நிப்பின்மேலும் மென்ட்மோர் என்ற பெயர் செதுக்கப்பட்டிருக்கிறதா என்று கவனித்துப்பாருங்கள். உங்கள் ஆயுள்கால சேவையின் அஷ்யூரன்ஸ்.

மென்ட்மோர் ஆட்டோப்ளோ.

இங்கிலாந்தில் செய்யப்பட்டது.

**ரூ.15/-**

# MENTMORE

*Auto-Flow*

## FOUNTAIN PEN

வர்த்தக விசாரணைகளுக்கு உரிமைபெற்ற முழு விநியோகஸ்தர்கள்:-

15, [illegible] தெரு, மதுரை

# நோயுற்ற குழந்தைகளுக்குப் பல வருடங்களாக சேவை புரிந்து வருகிறது





ஜம்மியின் லிவர்க்யூர் பல்லாண்டுகளாக செய்து வரும் சேவையால் ஆயிரக்கணக்கான விலையற்ற சிற்றுயிர்கள் ஈரல் குலைக்கட்டி வியாதிகளிலிருந்து காப்பாற்றி மனித சமூகத்திற்கு விசேஷ நன்மை புரிந்துவருகிறது.

டாக்டர்கள் இவ்வியாதியை போக்க ஆரம்ப நிலை, கட்டி முதிர்ந்த நிலைக்குத்தகுந்தவாறு 'சிம்பிள்' அல்லது 'காம்ப்பிளிகேட்டட்' லிவர்க்யூர் மருந்துகளை சிபார்சு செய்து இவ்வியாதியை குணப்படுத்துகிறார்கள்.

ஜம்மியின் சிம்பிள் லிவர்க்யூர் சிறிய அளவில் கொடுத்துவர, வியாதி வராமல் தடுக்கவும், பசி, ஜீரண சக்திவிருத்தி செய்யவும் மலச்சிக்கல்களைப் போக்கி ஈரல், குலைகளை சரியானபடி வேலைசெய்கிறது.

முன்னால் ஈரல் குலைக்கட்டி நோயினால் பீடிக்கப்பட்ட குழந்தைகளின் தாய்மார்கள் திரும்பவும் கர்ப்பம் தரிக்கும் பொழுது ஜம்மியின் டானிக்கை உபயோகப்படுத்துவது நல்லது. பிறக்கப்போகும் குழந்தையின் ஈரல், குலைகள் தாய் மூலமாய் ஏற்படுகிறது என்ற ஆயுர்வேத சித்தாந்தத்தை அனுசரித்து இந்த டானிக் தயாரிக்கப்பட்டுள்ளது.

## ஜம்மியின் லிவர்க்யூர்



எங்கும் கிடைக்கும்.

ஜம்மி வெங்கடரமணய்யா அன் ஸன்ஸ்

மைலாப்பூர், மதராஸ். (போன் நெ. 8139)

தெப்பகுளம், திருச்சிராப்பள்ளி, பெரிய தெரு கும்பகோணம், பெங்களூர், பம்பாய் 4. (போன் நெ. 41593) மற்றும்: கல்கத்தா, லக்னோ, etc.

ADARTS J. 234 TAMIL _8

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press 116-119, Sladens Garden, Poonamalle High Road, Kilpauk, Madras.

# கல்கி



KALKI நவம்பர் 23, 1947 4 அணா

# தி இந்தியன் பாங்க்
## லிமிடெட்



தலைமை ஆபீஸ் :

"இந்தியன் பாங்க் பில்டிங்ஸ்"
வடக்கு பீச் ரோடு, மதருஸ்



லோகல் ஆபீஸ்கள் :

எஸ்பிளனேட், திருவல்லிக்கேணி, மவுண்டு ரோடு, மயிலாப்பூர், தியாகராயநகர், புரசவாக்கம், எழும்பூர்

சென்னை மாகாணத்தில் எல்லா முக்கியமான இடங்களிலும் பம்பாயிலும் பிராஞ்சுகளும் சப் ஆபீஸ்களும் உள்ளன.



வழங்கி வாக்களிக்கப்பட்ட மூலதனம் ரூ. 72,00,000

செலுத்தப்பட்ட மூலதனம் ரூ. 53,00,000

ரிசர்வ் நிதி ரூ. 62,00,000



சகலவிதமான பாங்க் அலுவல்களும் நடத்தப்படும். மற்ற விவரங்களுக்குப் பாங்கியின் எந்த ஆபீஸுக்காவது எழுதி தெரிந்து கொள்ளலாம்.

N. கோபால அய்யர்
செக்ரடரி

நீங்கள் கவனிக்க வேண்டியது!



குணம் நிறைந்த
கோகுல் கூந்தல்
தைலம்
கூந்தலுக்கு சிறந்த மணமும் மிருந்த வனப்பும் நிறைந்த வளர்ச்சியும் தருகிறது ஆயிரக்கணக்கான மக்கள் அதையே உபயோகிப்பதன் உண்மையும் அதுவே






கோகுல் டிரேட் மார்க் கவனித்து வாங்குங்கள்

டி.எஸ்.ஆர்.&கோ
கும்பகோணம்

மதராஸ் ஏஜண்டு :
புஷ்பவனம் ஸ்டோர்ஸ்
பைகிராப்ட்ஸ் ரோடு,
திருவல்லிக்கேணி :: மதராஸ்

கோவை, நீலகிரி ஜில்லாக்கள் & பாலக்காடுக்கு ஏஜண்டு :
B பாலபட்டாபி,
வைசியாள் தெரு, கோயமுத்தூர்

